# குதூகலம்

அசோகமித்திரன்

அவன் குதூகலத்துடன் வெளியே வந்தான். எவ்வளவோ மாதங்களுக்குப் பிறகு அவன் அந்த அளவுக்கு வெளியே வருகிறான். மேலே வீட்டுக் கூரையைப் பார்க்கும் நிர்ப்பந்தம் இல்லாமல் ஆகாயத்தையும் அதில் பதிந்திருக்கும் நக்ஷத்திரங்களையும் பார்க்க முடிந்தபோது அவனுக்கு மகிழ்ச்சி பல மடங்காயிற்று. அவன் துள்ளித் துள்ளிக் குதித்து ஓடினான். துள்ளும்போது தான் குழந்தையாகிவிட்டது போன்ற ஓர் உணர்வு ஏற்பட்டது. குழந்தையாயிருக்கும்போது அவன் விரும்பிக்கேட்ட தின்பண்டங்களோ பொம்மைகளோ சில வேளைகளில் மறுதளிக்கப்பட்டிருக்கின்றன. அவன் கீழே விழுந்து காயம்பட்டுக் கொண்டிருக்கிறான். முதல் வகுப்பு படிக்கும்போது ஒரு கறுப்பு குண்டு டீச்சருக்கு அவன்மீது எக்காரணத்தினாலோ ஒரு விரோத பாவம் வந்துவிட்டது. அவன் சின்னஞ்சிறு குழந்தை, காரிய காரணம் தெரியாதவன் என்று அவளுக்குத் தெரிந்திருந்தால்கூட அவனை அடிக்கடி அதட்டி மிரட்டி அடித்திருக்கிறாள். அவன் அழத் தொடங்கியதும் அவள் இன்னும் அதிகமாக அதட்டி மிரட்டி அவனை வாயை மூடிக்கொண்டே அழும்படி செய்வாள். ஒரு முறை அவனுடைய பம்பரம் தெருச் சாக்கடை துவாரத்தில் விழுந்துவிட்டது. சாக்கடையுள் ஒரே இருட்டுடன் நாற்றமான நாற்றம். அவன் பம்பரம் இழந்து அழுதான். அவன் தெருவிலேயே ஒரு போக்கிரிப் பையன் இருந்தான். அவன் வயதிலும் உருவத்திலும் எவ்வளவோ பெரியவன். அவன் இவனைத் தலையில் குட்டிவிட்டுப் போவான். ஒரு முறை கட்டிப் பிடித்துக் கசக்கி நிக்கரையும் அவிழ்த்து விட்டான். அப்போது அழுதிருக்கிறான். அம்மாதிரி எவ்வளவோ நாட்களில் எவ்வளவோ காரணங்களுக்காக அவன் அழுதிருக்கிறான். இருந்தாலும் அந்நாட்கள்தான் அவன் வாழ்க்கையில் உண்மையான மகிழ்ச்சிகரமான நாட்கள் என்று அவன் பெரியவனாகி, அவன் பெரியவன் என்கிற பிரக்ஞை ஏற்பட்டு, நாட்கள் செல்வது இனி அடுத்த நாளை உற்சாகத்துடன் எதிர்பார்க்கும் வயதைத் தாண்டியவை என்று தோன்ற ஆரம்பித்ததிலிருந்து தோன்ற ஆரம்பித்தது. அதற்குள் அவன் எப்படியெல்லாமோ சுற்றிவிட்டு, கல்யாணம் செய்து கொண்டு, குழந்தைகளைப் பெற்றுக்கொண்டு, நான்கு உத்தியோகங்கள் பார்த்துவிட்டு, ஒரு முறை ரிக்ஷாக்காரனால் அடிபட்டு, ஒரு சீட்டுக் கம்பெனியின் தவணைகளை ஒழுங்காகக் கட்டாததால்கோர்ட்டுப் படிக்கட்டுகளை ஐந்தாறு முறை மிதித்து, ஆயுள் இன்ஷூரன்ஸ் பாலிசிகள் இரண்டு எடுத்து இரண்டையும் தவறவிட்டு, அப்பாவைக் கொளுத்துவதற்காகச் சுடுகாட்டுக்குச் சென்று, பின் அதே சுடுகாட்டுக்குத் தன் குழந்தை ஒன்றைப் புதைத்துவிட்டு வருவதற்குச் சென்று, வயிற்று வலி வரவழைத்துக்கொண்டு, இத்தனையும் ஆனபின் அவனுக்குத் தன் சிறு பிராய நினைவுகள் மீண்டும் மீண்டும் வர ஆரம்பித்தன. ஒவ்வொரு நாளும் பலப் புதுத் தகவல்கள் ஞாபகத்திற்கு வந்தன. இவ்வளவு சிறிய தகவல்கள், எடுத்துக் கூறப்போனால் எவருக்கும் மிக மிக அற்பமாகத் தோன்றக் கூடிய தகவல்கள், இவை எப்படி இவ்வளவு தெளிவாக, இவ்வளவு முக்கியமாக நினைவுக்கு வருகின்றன என்று அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. அதே அற்பமான விஷயங்கள் அவனுக்கு மட்டும் ஒரு தனி முக்கியத்துவத்துடன் வந்தன. என்றோ நடந்த ஒவ்வொன்றுக்கும் இன்று பல அர்த்தங்கள், விளக்கங்கள் தெரிந்தன. அழுத அனுபவங்கள்தான் விசேஷமான இனிமையுடன் கலந்து வந்தன. அந்த இனிமை இப்போதும் குறையாமல் தொடர்ந்து அவனுக்கு உற்சாகமூட்ட அவன் துள்ளித் துள்ளிக் குதித்து ஓடினான்.

அவன் திரும்பி, பின் மேலே பார்த்தான். ஆகாயத்தைக் கண்ட மகிழ்ச்சியில் ஆகாயத்தைச் சரியாகப் பார்க்காமலேயே தன் நினைவில் தங்கிப்போயிருந்த ஆகாய அனுபவத்தை மட்டும் மனத்தின் மேல் தளத்திற்குக் கொண்டு வந்து ஆகாயத்தைப் பார்க்கத் தவறிவிட்டான். இப்போது நினைவின் இடர்ப் பாடு இல்லாமல், மனதால் பார்க்காமல், கண்களால், தன் உடலனைத்தாலும் ஆகாயத்தைப் பார்த்தான். அதற்குக் கண் மூக்கு வாய் என்று ஒன்றும் இல்லாதபோதிலும் அது அவனைப் பார்த்துப் புன்முறுவல் புரிந்ததுடன் இழுத்துக் கட்டிக்கொண்டு முத்தமிட்ட மாதிரியும் இருந்தது. அம்மாதிரி முத்தம் அவன் அம்மாதான் அவனுக்குத் தந்திருக்கிறாள். அதுவும் அவன் பள்ளிக் கூடங்கள் போக ஆரம்பித்தவுடன் நிறுத்திவிட்டாள். அவன் அம்மாவும் உருவத்தில் அவ்வளவு பெரியவளல்ல. ஆனால் அவள் அணைத்துக் கொள்ளும்போது அவனை அவன் கனபரிமாணமுள்ளவன் என்பதையே மறக்க அடித்து விடும்படி அணைத்துக் கொள்வாள். அவளுக்குத் தன்னுடைய எந்தக் குழந்தையை அணைத்துக் கொண்டாலும் அதற்குத் தான் ஒன்று தனி என்கிற உணர்வை ஒரேயடியாக இல்லாமல் செய்து விடுவாள். எல்லா அம்மாக்களுக்கும் அது சாத்தியமானதாக இருக்க வேண்டும், இருக்கும். ஆனால் எல்லா அம்மாக்களும் அந்தச் சக்தியை, அந்தப் பிரத்தியேக உரிமையை, பயன்படுத்துவதாக அவனால் கூறிவிட முடியவில்லை. இன்று ஆகாயம் அம்மாவைப் போல் கட்டியணைத்து முத்தம் தருகிறது.

அவன் இப்போதுதான் நிலவைப் பார்த்தான். பௌர்ணமிக்கு மூன்று நாட்கள் இருந்தன. ஆதலால் நல்ல, பெரிய, பிரகாசமான சந்திரன். கண்களுக்குத் தெரியாதபடி ஏதோ திரவம் போன்றது ஒன்றையும் நிலவு மேலிருந்து பூமிக்கு இறங்க வைத்துக் கொண்டிருந்தது. அந்த ஆற்றல் சூரியனுக்குக் கிடையாது. சூரியன் பல நூறு மடங்கு அதிக வெளிச்சம் தரலாம், தணலாகச் சுட்டு, வறுத்து எடுக்கலாம், ஆனால் பரிமாணமுள்ளது எதையும் தர முடியாது. சந்திரனால் அது முடிந்தது. சந்திரன் இறக்கும் அப்பொருளின் பளுவைத் தாங்க முடியாமல்தான் எல்லாரும் படுத்துக் கொண்டு விடுகிறார்கள். மாடுகள் படுத்துக்கொண்டு விடுகின்றன. பறவைகள் படுத்துக்கொண்டு விடுகின்றன. அப்படிப்பட்ட வேளையில் அவன் துள்ளிக் குதித்து ஓட விடுதலை கிடைத்ததில் அவனுக்குப் பெருமையாக இருந்தது. ஆனால் அவன் பெருமையின் வேகம் சிறிது மட்டுப்பட்டது. அங்கே ஒரு சினிமாக் கொட்டகையில் இரவுக் காட்சியிலும் சந்திரப் பளுவிற்கு எதிர்ப்புத் தெரிவித்துக் கொண்டு நிறைய மனிதர்கள் தென்பட்டார்கள். அதில் அநேகம் பேர் வசதிகள் அதிகமில்லாத ஏழை எளியவர்கள். ஒரு வேர்க்கடலை வண்டியைச் சுற்றி வந்து கொண்டிருந்தார்கள். அந்த வண்டியின் பெட்ரோமாக்ஸ் விளக்கு கண்ணைக் கூசும்படி எரிந்து கொண்டிருந்தாலும் அந்த வெளிச்சத்தில் அம்மனிதர்கள் வெறும் நிழல்களாகத்தான் தெரிந்தார்கள். உண்மையில், ஏதோ வெளிச்சம் தந்து விடுவதுபோல அந்த விளக்குக்கு ஒரு போலித்

தோற்றம். உண்மையில் அது நிழல்கள்தான் உண்டு பண்ணியது.

அவன் அந்தச் சுவர் வழியாகப் புகுந்து வேர்க்கடலை வண்டிக் கூட்டத்தின் நடுவே துள்ளிக் குதித்து ஓடிப்போனான். நிழல்கள் அந்த வண்டியைச் சுற்றி மட்டும் இல்லை. அந்தச் சினிமாக் கொட்டகையின் பின்புறத்துச் சுவர்ப் பக்கமும் அவை நகர்ந்து கொண்டிருந்தன. அந்த நிழல்கள் அந்தப் பிரதேசத்தை நாற்றமும் ஈரமும் உடையதாகச் செய்துவிட்டு வந்து கொண்டிருந்தன. கொட்டகை உள்ளே மங்கலாகச் சில விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. உள்ளே நாற்காலிகளில் அந்த இடைவேளையிலும் உட்கார்ந்து கொண்டிருந்தவர்கள் தாறுமாறாக உட்கார்ந்திருந்தார்கள். சிலர் தூங்கிக் கொண்டும் இருந்தார்கள். அந்தக் கொட்டகையில் பெண்கள் பகுதி என்று தனியாக இருந்தது. கீழ் வகுப்புகள் இரண்டிற்கோ மூன்றுக்கோ மட்டும் அப்படி ஒரு தடுப்பு போட்டிருந்தது. இரவுக் காட்சிக்கு வந்த பெண்கள் எல்லாரும் தாறுமாறாகத்தான் இருந்தார்கள், உடையில், உட்காருவதில். பலரிடம் சிறுநீர் நாற்றம், வகை வகையான நாற்றம் அடித்துக் கொண்டிருந்தது. இரவுக் காட்சிக்கு சினிமா பார்க்க வரும் பெண்கள் இயற்கையில் அவர்களுக்குச் சுமத்தப்பட்ட நிர்ப்பந்தங்களைத் தூக்கி எறிந்துவிட்டுதான் இருந்தார்கள் அந்தச் சினிமாக் கொட்டகையில் கழுவிக்கொள்ளவே அவர்களுக்குத் தண்ணீர் கிடைக்காது. கிடைக்கும் தண்ணீர் கொண்டு அவர்கள் கழுவிக் கொண்டால் அதைக் கழுவிக் கொள்வதற்கு இன்னும் அதிகம் தண்ணீர், வேறு தண்ணீர் வேண்டும். அவனுக்கு அவர்களைப் பார்த்தவுடன் பரிவும் உற்சாகமும் வந்தது. அவன் ஆண்கள் பெஞ்சு நாற்காலிகள்மீது ஏறிக் குதித்த வண்ணம் பெண்கள் பக்கத்தை அடைந்தான். அங்கே பருத்த, கருத்த, மிகவும் நாற்றம் அடிப்பவளாகப் பார்த்து அவள் பக்கத்தில் போய் உட்கார்ந்தான். அவள் உட்கார்ந்து கொண்டே தூங்கிக் கொண்டிருந்தாள். அநேகமாகப் பெண்கள் பகுதியில் எல்லாருமே தூங்கிக் கொண்டிருந்தார்கள், தூங்கி வழிந்து கொண்டிருந்தார்கள். முகத்திலும் உடலிலும் வியர்வையும் சோம்பலும் களைப்பும் ஏமாற்றமும் குரூரமும் அஞ்ஞானமும் காமமும் வழியத்தான் வாயைப் பிளந்துகொண்டு புடவை போன இடம் தெரியாமல் உட்கார்ந்தும் சாய்ந்தும் தூங்கி வழிந்து கொண்டிருந்தார்கள். அவன் அவர்கள் நடுவில் மிகவும் சந்தோஷத்துடன் உட்கார்ந்து கொண்டான். இளம் வயதுப் பெண்களும் சிலர் இருந்தார்கள். அவர்கள் தூங்கி வழிவது குறைச்சலாகத்தான் இருந்தது. அவன் பருத்த பெண்மணிகளைத் தள்ளிக் கொண்டு முன்னேறி இப்போது ஒரு இளவயதுப் பெண்ணின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். அவள் தன் கண்களுக்கு ஏகமாக மையிட்டுக் கொண்டு வெள்ளியிலான வளையங்களும் கால் கொலுசும் அணிந்திருந்தாள். அவள் தன் ஈறுகளைக் கருக்கடித்துக் கொண்டிருந்தாள். மூக்கில் மூக்கணி அணியத் துவாரம் செய்திருந்ததை அவள் பல நாட்களாக ஒன்றும் அணியாமல் மீண்டும் சதை மூடிக் கொள்ள விட்டிருந்தாள். அடைப்பட்டுக் கொண்டிருக்கும் அந்த மூக்குத் துவாரத்தினாலேயே அவள் முகம் ஏதோ ஒன்றை இழந்தது போலக் காட்சியளித்தது. அவளுக்கும் தூக்கக் கலக்கம். அதையும் மீறிக் கொண்டு அவள் இரவுக் காட்சிக்கு வந்திருக்கிறாள். அவள் வீட்டைக் காட்டிலும் தூங்குவதற்குச் சினிமாக் கொட்டகை தகுதியானதென்று வந்திருப்பாள். அவன் அவள் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு அவள் இடையைச் சுற்றியும் பிடித்துக் கொண்டான். அவளுடைய இருதயத் துடிப்பை வயிற்றில் உணர முடிந்தது. அவளுக்கு இருதயம் சிறிது கீழிறங்கி இருக்கவேண்டும். அல்லது அவள் இனி பிறக்கப்போகும் குழந்தையைச் சுமந்து கொண்டிருக்கலாம். வெற்றிலைக் காவி ஊறிப்போன வாயைப் பிளந்துகொண்டு மூடிப்போகும் மூக்கணித் துவாரம் கொண்ட மூக்கை அகல அகல விரித்துக் கொண்டு அவள் தூங்கி வழிந்து கொண்டிருந்தாள். அப்போதுதான் அவன் கவனித்தான்: அவள் காலடியில் தரையில் அவள் ஒரு குழந்தையைக் கிடத்தியிருந்தாள். வெற்றிலை போட்டுக் கொண்டிருந்த அவள் அதற்குப் பக்கத்திலேயே துப்பியும் இருந்தாள் அந்தக் குழந்தையும் தூங்கியபடி இருந்தது.

மங்கல் விளக்குகள்கூட அணைந்தன. மீண்டும் சினிமாக் காட்சி ஆரம்பமாயிற்று. அவன் சில நிமிஷங்கள் அந்தத் துலுக்கப் பெண்ணின் இடையைக் கட்டிப் பிடித்தவண்ணம் திரையில் ஓடும் நிழல்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு கூரையடியில் அதிகநேரம் தங்கிப்போய்விட்டோம் என்ற உணர்வு ஏற்பட்டது. மேலும் திரை நிழல்கள் அவன் குதூகலத்தைக் குறைக்கும் வண்ணம்தான் இருந்தன. இப்போது போய் இவைகளைப் பார்த்துக் கொண்டு காலம் கழிக்கிறோமே என்றும் அவனுக்குத் தோன்றியது. உடனே அவன் கிளம்பி வெளியே வந்தான். குழந்தையை மிதித்து விட்டான். அப்படியும் அழாமல் அந்த அசுத்தம் நிறைந்த தரையில், அசுத்தமும் நாற்றமும் பரவியிருக்கும் அந்த அடைசலில், அது தூங்கிக் கொண்டிருந்தது.

அவன் மீண்டும் குதித்துக் குதித்துப் போனான். தெரு விளக்குகள் அணைக்கப்பட்டுவிட்டாலும் எங்காவது ஒரு டீக்கடை அல்லது பால்க்கடை திறந்திருந்து அங்கு எரிந்து கொண்டிருக்கும் விளக்கு தெருவுக்கும் வெளிச்சம் தந்தது. தெருவில் பசுமாடுகள், எருமை மாடுகள், கன்றுகள் படுத்து அசை போட்ட வண்ணம் இருந்தன. அந்த நேரத்தில் அந்தத் தெரு வழியாகப் போக வேண்டிய லாரி ஒன்று வெகு வேகமாகப் பெரும் இரைச்சல் போட்டுக் கொண்டு வந்தாலும் மாடுகளுக்காக வேகத்தைக் குறைத்து, நெளிந்து நெளிந்து போக வேண்டியிருந்தது. அவன் எகிறிக் குதித்து லாரிமீது தன்னைப் பொருத்திக் கொண்டான். லாரி காலியாக இருந்தது. அதை ஏதாவது ஆற்றங்கரைக்கு ஓட்டிச் சென்று ஆற்று மணலை நிரப்பிக் கொண்டு வருவார்கள். விடியற் காலையிலேயே எங்கோ வீடு கட்டுவதற்கு ஒரு லாரி ஆற்று மணல் இறக்குவதற்கு அவர்கள் ஒப்புக் கொண்டிருக்க வேண்டும். லாரி காலியாக இருந்தபடியால் அலுக்கல் குலுக்கல் இரைச்சல் எல்லாம் அதிகமாகவே இருந்தது. ஆனால் அதில் அவன் நன்றாகப் படுத்துக் கொண்டான். படுத்துக் கொண்டபடியே ஆகாயத்தைப் பார்த்த வண்ணம் இருந்தான். ஆகாயமும் அந்த நக்ஷத்திரக் குவியல்களும் அவனுடன் கூட ஓடி வருவதுபோல இல்லை; அவன், ஆகாயம், நக்ஷத்திரங்கள் எல்லாமே எங்கோ தலை தெறிக்கும் வேகத்துடன் எப்போதுமேஓடிக்கொண்டுதான் இருக்கின்றன என்று அவன் உணர முடிந்தது. நினைவுகள் இல்லாமல் அந்தந்தக் கணத்தின் அனுபவமே ஏற்பட்டு மறைந்து போய்க் கொண்டிருந்தபடியால் அவனுடைய குதூகலம் பலமடங்காயிற்று.

அவன் துள்ளிக் குதித்தான். அப்போது லாரியிலிருந்து தெருவில் விழுந்து விட்டான். ஒரு கணம் நிலை தடுமாறியதுபோல இருந்தது. ஆனால் உடனே தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு ஓடிப்போகும்

லாரியின் பின்புறச் சிவப்பு விளக்கைப் பார்த்த வண்ணம் நின்ருன். நினைவு வந்துவிட்டது. அந்த லாரி அவனை அவன் வீட்டருகில்தான் தள்ளிவிட்டுச் சென்றிருந்தது. அந்நேரம்வரை குதூகலம் தவிர வேரெருரு உணர்ச்சிக்கும் இடமில்லாத அவனிடம் இப்போது ஏதோ ஏக்கம் ஒன்று தன்னை வீட்டுப் பக்கம் இழுப்பதை உணர்ந்தான். மீண்டும் வீடா என்று ஒரு புறம் தோன்ற இன்ஞெரு புறம் வீட்டைப் பற்றி, அவன் வீட்டுச் சாப்பாடு பற்றி, அவன் குழந்தைகள் அவன் தோள்மீது உப்பு மூப்டை விளையாடுவது பற்றி எல்லாம் ஏக்கம் தோன்றியது. அப்புறம் அவனுடைய சாய்வு நாற்காலி, கிராமபோன், குடை, மரப் பெட்டி, நாய், புதுச் செருப்பு, இரண்டாவது குழந்தை... எல்லா உணர்வுகளும் அகன்று ஏக்கம்தான் மிஞ்சி அந்நேரத்தில் ஏக்கம்தான் எல்லாவற்றைக் காட்டிலும் அதிக வலிமை பொருந்தியதாக இருந்தது. அவன் மீண்டும் வீட்டுக்குச் சென்ருன். இப்போது குதூகலம் முற்றிலும் அகன்று வெறும் குழப்பத்துடன் தான். அசாதாரண சுதந்திரத்தை அனுபவித்துவிட்டு அதைத் தானுக இழப்பதற்குத் தயாராகி அவன் வீட்டிற்குள் நுழைந்தான். வீடு விழித்திருந்தது. வைத்தியர் வந்திருந்தார். "இரண்டு மணி நேரத்திற்கு மேலாகியிருக்க வேண்டும்'' என்ருர். அவன் எவ்வளவு முயற்சி செய்தும் அவன் உடலுக்குள் புகுந்து கொள்ள முடியவில்லை. ●

## எறும்புகளும் நெருப்பும்

அது எறும்புகளின் குடியிருப்பாய் இருப்பதை அறியாமல் ஒரு உளுத்துப் போன கட்டையை நெருப்பில் எறிந்தேன். கட்டை பிளக்கத் தொடங்கியதும், எறும்புகள் வெளிப்பட்டுத் திகைத்து நான்கு திசைகளிலும் ஓடின. கட்டையின் மேற்புரத்தில் ஓடின—ஜ்வாலையில் தீய்ந்தும் செத்தும். நான் கட்டையை இறுக்கிப்பிடித்து மறுபுறத்தைத் திருப்பினேன். இப்பொழுது பல எறும்புகள் தப்பித்துக் கொண்டன. மணலுக்கும் பைன் மரக் குச்சிகளுக்கும் ஓடின.

ஒரு விசித்திரம். அந்த எறும்புகள் நெருப்பை விட்டு நேரே விலகி ஓடிவிடவில்லை.

அச்சத்தைத் தவிர்த்துக் கொள்ள முடிந்ததும் அவை குழுக்களாகத் திரும்பி வந்தன, ஏதோ ஒருசக்தி தாங்கள் விட்டுச் சென்ற தாயகத்துக்கு அவற்றை மீண்டும் இழுப்பது போல. எரிகிறகட்டைக்கே மீண்டும் திரும்பி, சாகிற வரைக்கும் திரிந்தவை பல அவற்றில் இருந்தன.

—அலெக்ஸாண்டர் ஸால்ஜெனிட்ஸின்

தமிழில்: ரங்கநாதன்

## யாப்பியல்

பூங்குயிலே,
யாப்பியல் கற்றனையோ நீ?
இசைக்கும் வசைக்கு—
மின்றியமையாத
'சை'கைகளைக் கற்றுக்கொள்.
இலக்கண மிதுவே.
இன்றே லிடையிற் படையாய்ப்
படுத்து விடுவாய்.
அது உன்பாடு.
என் பாடு
உன்னைப் பார்த்துக்
கா கா எனக் கரைதல்.
காவாக்கால் சோகாப்பா—
யிசையிழுக்குப் பட்டு.

—மா. தக்ஷிணமூர்த்தி

முட்டி முட்டிப்
பால் குடிக்கின்றன
நீலக் குழல் விளக்கில்
விட்டில் பூச்சிகள்

—பாலகுமாரன்

# மழைக்காகக் காத்திருந்தவன்

## ராமகிருஷ்ணன்

காலை எட்டரை மணிக்கே வெயில் உடம்பைச் சுட்டது. பாதையேதும் இல்லாத அவ்வூருக்கு அவன் நடந்து வர நேர்ந்ததை நினைத்துக் கொண்டான். இரண்டுமணி நேரத்திற்கு நடந்திருக்கிறான். வரப்புகளின் மேலும், ஏரிக்கரைகள் மீதும், சகதி படிந்த நிலங்களின் வழியேயும் அவன் வந்ததை நினைக்க அவனுக்கே சிரிப்பு வந்தது. போனவருடம் இந்த மாதம் இந்தத்தேதியில் தான் என்ன செய்துகொண்டிருந்தோம் என்ற கேள்வி ஒரு கணம் எழுந்தது. ஏன், போன மாதம் இந்தத் தேதியில் இப்படி ஒரு மாதங்கழித்து தெரியாத ஊருக்கு சாலையில்லாத வழியில் போய்க்கொண்டிருப்போம் என்று நினைத்ததாவது உண்டா? இதை யோசிக்க யோசிக்க, கவர்ச்சி மிக்கதாயும், மருட்சி மிக்கதாயும்கூட இருக்கிறது. அடுத்த மாதம் இந்தத் தேதியில் என்ன செய்துகொண்டிருக்கப் போகிறோமோ!

பக்கத்தில் எங்கேயோ நாய்க்குரைப்பின் சத்தம் கேட்டது. ஒரு கணம் மேலே போகாமல் தயங்கி நின்றான். நாட்டுப்பக்க நாய்; எந்தப் பக்கம் எப்படி வந்து பிடுங்குமோ? நாய்க்கு அஞ்சி நின்ற அதே கணம் அவன் கால்கள் கடுத்ததை உணர்ந்தான். தலையில் மயிர்க்கால்களுக்குக் கீழே கசகசத்து நெற்றியில் வேர்வை இலேசாக வழிந்த உணர்வு அவனுக்குப் பிடிக்கவில்லை. கைக்குட்டையை எடுக்கக் கூடப் பொறுமையின்றி சட்டைக்கையில் தலையைச் சாய்த்து, கையைச் சற்று தூக்கி ஒற்றிக்கொண்டான். தோளிலிருந்து தொங்கிய நீளமான பையின் வாயை விரல்களினால் மூடிக்கொண்டு திரும்பித் திரும்பிப் பார்த்தான். எப்போதும் ஒரே சீரான தார்ச்சாலையில்நடந்து பழக்கப்பட்ட அவனுக்கு இப்படி வழியற்ற வழியில் நடப்பது அசதியைத் தந்தது. கால்கள் எதிர்பாராத இடங்களில் சட்டென உள்ளே போயின; அல்லது எதிர்பாராத சமயத்தில் தரையின் மேடுகளில் உதைபட்டு, இடுப்பிற்குக் கீழே வலியை உண்டாக்கின. கிராமப்புறத்தில் எப்படி நடப்பதென்று அவனுக்குத் தெரியவில்லை.

நாயை அவனால் பார்க்க முடியவில்லை. அக்கம் பக்கத்தில் மனிதர்கள் யாரையும் காணோம். துணிந்து அவன் எதிரே தென்பட்ட சிறிய மேட்டின்மேல் ஏறி எந்தப்பக்கம் போவதென்று யோசித்தான். மேட்டின் இறக்கத்திலிருந்து தெற்கே சற்று தள்ளி ஒரு புதர் தெரிந்தது. புதரின் பின்புறமிருந்து நாயின் குரைப்புச் சத்தம் மறுபடியும் கேட்டது. அவன் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே ஒருசிறிய பையன் நாய் பின் தொடர புதருக்கு இந்தப் பக்கம் வந்தான்.

நாய் இவனைப் பார்த்துக் குரைத்தது.

பையின் பட்டைகளை இறுகப் பிடித்துக்கொண்டு, நாயையும் பையனையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டே தைப்பாக்கத்திற்கு எப்படிப் போவது என்று கேட்டான். இப்படியே தெற்கே போனால் ஒற்றைப் புளியமரம் ஒன்று வரும். புளிய மரத்தைத் தாண்டி இன்னும் கொஞ்சம் நடந்தால் வற்றிப்போன குளம் ஒன்று தெரியும். குளத்திற்கு மேற்கேதான் தைப்பாக்கம்.

அவன் பையனைத் தாண்டிப் போகும்போது நாய் அவனுக்கு மிக அருகே வந்து முகர்ந்து பார்த்தது. ஒருகணம் அவனுக்கு வியர்த்துக் கொட்டியது. மயிர்க்கால்கள் கூச்செறிந்தன. பத்தடி போய் திரும்பிப் பார்த்தான். பையனும் நாயும் அவனையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். நாய் என் பையைப் பார்த்துத் தான் குரைத்தது என்று முனகிக் கொண்டான்.

பதினைந்து நிமிஷங்கள் நடந்தபிறகு புளியமரம் தெரிந்தது. அதற்கும் அப்பால் பத்து நிமிஷங்களுக்குப் பிறகு வற்றியகுளத்தை அடைந்தான். குளத்தில் நீர் வற்றிப் பலநாட்கள் ஆகியிருக்கவேண்டும். சேறு வெயிலில் காய்ந்து, உலர்ந்து, பிளவுகளைக் காட்டிக்கொண்டு பாளங்களாகத் தெரிந்தது. தெற்குக் கரையில் ஏழெட்டு பெரிய கற்கள் சூரிய ஒளியில் மினுமினுத்தன.

மேற்கே கிராமம் மேடான பகுதியில் இருந்தது. மேட்டில் ஏறியபோது கால்கள் தூசியில் அமிழ்ந்தன. புற்கள் கூடத் தென்படவில்லை. அவன் சுற்றிப்பார்த்தவாறே மேட்டைக் கடந்தான். வழியில் சிறிய செடிகளெல்லாம் வெயிலில் கருகிப்போயிருந்தன. ஒரு கத்தாழைப் புதரை ஒட்டிக் கருவேலமரம் சிறிது நிழலைப் பரப்பிக்கொண்டு நின்றது. மரத்திற்குச் சற்று குறுக்கே இடைவெளிவிட்டு ஏதோ முட்செடி முள்ளை விசிறிக்கொண்டு நின்றது.

அந்தக் கிராமத்திலிருந்த முப்பத்துமூன்றுகுடிசைகளில் பாதி மிக மோசமான நிலையில் கூரை சரிந்தும், மண் சுவர்கள் இடிந்தும் காணப்பட்டன. எல்லாக் குடிசைகளும் தாறுமாறாய் இறைந்து கிடந்தன. போகிறவழியில் கட்டில் ஒன்றில் ஒரு கிழவி எங்கோ வெறித்தவாறு உட்கார்ந்திருந்தாள். நான்கு குடிசைகள் தள்ளி, இறக்கமாக இருந்த கூரை ஒன்றன் முன் ஏழெட்டுப் பெண்கள் நின்றிருந்தார்கள். அக்கூரையினுள்ளிருந்து விட்டுவிட்டு யாரோ ஒரு பெண் அலறிக் கொண்டிருந்தாள். இவன் வருவதைப் பார்த்து, வாயிலுக்கு முன், மேலே தூக்கிக் கட்டியிருந்த கோணித்திரையை ஒருத்தி அவிழ்த்துவிட்டாள்.

ஆண்கள் எவரும் தென்படவில்லை. அவன் விசாரித்தபோது, அனைவரும் ஊருக்கு வெளியே நிலங்களில் இருப்பதாகப் பற்கள் காவியேறிய நடுத்தர வயதுப்பெண் அவனிடம் சொல்லிவிட்டு, பக்கத்திலிருந்த சிறிய பெண்ணிடம் அவனை அழைத்துக் கொண்டு போகும்படி சொன்னாள்.

அவன் அப்பெண்ணுடன் நகர்ந்தான்.

அவன் தைப்பாக்கத்தை விட்டுக் கிளம்பியபோது மணி பன்னிரண்டை. நெருங்கிக் கொண்டிருந்தது. இந்த வெயிலில் மறுபடியும் குறைந்தபட்சம் இரண்டு மணிநேரம் நடப்பதை அவனால் யோசித்துப் பார்க்கக் கூட முடியவில்லை. தான் வந்தவழி மிகச்சுற்றலானது என்பதை அறிந்து கொண்டான். ஊருக்கு வட்கிழக்கே இருக்கும் பெரிய ஏரியைக் கடந்தால் பஸ் போகும் சாலையை அடைந்துவிடலாம் என்று தெரிந்துகொண்டபோது அவனுக்கு மிக ஆறுதலாக இருந்தது. சகதியில் நடக்க வேண்டாம்; வரப்பின்மீது மிக விழிப்புடன் கீழே கால் சறுக்கிவிடாமல் ஜாக்கிரதையாகப் போகத் தேவையில்லை; ஏரியின் உள்ளேயே போகலாம்; நீர் நன்றாக வற்றி இரண்டு மாதங்களுக்கு மேல் ஆகின்றது. ஒருவேளை ஒருமணிநேரம் தான் நடக்க வேண்டியிருக்கலாம்; ஏரியின் உட்பகுதி இன்னும் மேடுபள்ளங்களில்லாமல் இருக்கலாம். மேலும் நாய்களுக்குப் பயப்பட வேண்டியதில்லை. ஏரிக்குள் நாய்களுக்கு என்ன வேலை? ஆனால் திசை தப்பாமல் இருக்கவேண்டும். அவன் மிகக் கவனத்துடன் எப்படிப் போகவேண்டும் என்று கேட்டு வைத்துக்கொண்டான்.

அவன் நடக்க ஆரம்பித்தான். ஊரைவிட்டு வந்த இருபது நிமிஷங்களுக்குப் பிறகு எதிரே உன்னிப்பாகக் கவனித்தவாறு நடந்துகொண்டிருந்தான். தோளிலிருந்த பை இலேசாக ஆடிக்கொண்டிருந்தது. மேலே வெயிலின் கொதிப்பில் வானத்தின் நீலநிறம் மிகமங்கித் தெரிந்தது. ஒருமேகத்தையும் காணவில்லை. அவன் உடல் முழுவதும் வியர்வைவழிந்தது. தலையிலிருந்து நெற்றி வழியே வியர்வை ஒழுகியது அவனுக்குப் பிடிக்கவில்லை. கைகளை உயர்த்தித் துடைத்துத் துடைத்து அவன் கை விரல்கள் வலித்தன. கைக்குட்டை நன்ருக நனைந்து விட்டது. கைகளிலிருந்தும் வியர்வை பெருகி ஓடியது. அவன் சட்டையின் முதுகுப்புறம் நன்ருக நனைந்து விட்டதை உணர்ந்தான். வியர்வையைத் துடைக்காமலேயே இருக்க ஆரம்பித்தான். மிகப்பெரிய ஏரியாக இருக்க வேண்டும். இப்போதைக்கு இதைக் கடக்க முடியும் போல் தெரியவில்லை. சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான். எங்கேயும் ஒரு சிறிய பச்சையைக் கூடக் காண முடியவில்லை. எங்கிருந்தோ இரண்டு சக்கரங்களின் தடயங்கள் ஏரிக்குள் வளைந்து வந்திருந்தன. ஒருவேளை இந்தத் தடயங்களைப் பின்பற்றிப் போனுல் பயன் இருக்கும். வேண்டாம், இப்படியே நேராகப் போனுல் சீக்கிரம் போய்விடலாம் என்று சொன்னுர்களே.

அவன் கூர்ந்து எதிரே பார்த்தான். ஏரிக்கரை ஒன்று தென்பட்டது அவனுக்கு மிக ஆறுதலாக இருந்தது. அதை நோக்கி விரைவாக நடக்கமுயன்ற போது கால்கள் தொய்ந்தன. தொண்டை எரிந்தது. மண்டையினுள் ஏதோ பளுவை ஏற்றி வைத்தாற் போலிருந்தது. மறுபடியும் கூர்ந்து எதிரே கவனித்தான். ஏரிக்கரை மங்கலாகத் தெரிந்தது. அவன் கண்கள் வெயிலில் குன்றி, எதிரே கோடுகளைக் கணக்கின்றிக் காட்டின. கருமையும் வெள்ளையுமாக அவன் கண்ணுக்கு முன்னே பூச்சிகளாகப் பறந்தன. அவன் காலை இழுத்து வைத்து நடந்தான்.

ஏரிக்கரையில் ஏறிக்கொண்டிருக்கும்போது குளிர்ச்சி பொருந்திய நீரை நினைத்துக் கொண்டான். அவன் ஒரு கணம் அக்குளிர்ச்சியில் தன்னைமறந்தான். அவன் மனதைவிட்டு அக்குளிர்ச்சி நீங்கு முன்னர், தான் மற்ருெரு வரண்டஏரியினுள் இறங்கிக்கொண்டிருப்பதைக் கண்டான்.

அவனுக்கு நீரைத்தொடர்ந்து மழையின் நினைவு வந்தது. மழை இப்போது பெய்தால் எவ்வளவு நன்ருக இருக்கும்! மழையை அவன் பார்த்து வெகு நாட்களாகிவிட்டன. இப்போதெல்லாம் அவன் மழையை மிக ஆவலுடன் எதிர்பார்க்கிருன். மழை பெய்து வெகுநாட்கள் சென்று விட்டன. மழையின் குளிர்ச்சியும், சூழ்நிலையும் அவனுக்குக் கனவுப் பொருள்களாகிவிட்டன என்று அடிக்கடி நினைத்துக் கொள்கிருன். ஈரம் நிரம்பிய காற்றையும், இருட்டிக்கொண்டு வரும் மேகங்களையும், இடியின் சத்தத்தையும் அவன் தாகத்தோடு இப்போதெல்லாம் வேண்டிக் கொள்கிருன். எங்கேயாவது கதவுகள் பாதி இரவில் ஓசையுடன் அடித்துக் கொண்டாலும், பாதி உறக்கத்தில், தலையணையிலிருந்து தலையை நிமிர்த்தாமலேயே, மழை வருகிறது, மழை வந்து விட்டது என்று சொல்லிக் கொண்டே இடியின் நாதத்தை எதிர்நோக்குகிருன். அவன் உடலில் புதிய மகிழ்ச்சி பொருந்திய உணர்வு குடிகொள்கிறது. செய்தித்தாள்களை ஒன்று விடாமல் படித்து, மழை இன்று வருமா என்று தெரிந்துகொள்கிருன். மழை அவனுடைய நினைவின் பெரும்பகுதியாகி விட்டிருக்கிறது. கனவுகளில் கூட அதன் பல தோற்றங்கள் அவனுக்குத் தென்படுகின்றன.

மழையைப் பார்த்து வெகு நாட்கள் ஆகிவிட்டன. வெயில் உடம்பைக் கடுமையாகச் சுடுகிறது. உடம்பில் ஒவ்வொரு பகுதியும் கொதிப்படைந்திருக்கிறது. மழையைப் பற்றி நினைத்தாலே மனம் குளிர்ச்சியடைகிறது. ஆனுல் மழைதான் வருவதாகக் காணும். அதைப்பற்றி யாராவது பேசினுலே உணர்ச்சி பொங்குகிறது. அவன் கண்முன்னே தென்னை மரங்கள் சாய்ந்து வேரோடு ஆடுகின்றன. மழை பெய்து அவற்றின் ஓலைகள் ஒய்ந்து நீரைக்கொட்டுகின்றன. தெருவில் விளக்குக் கம்பமும் விளக்கும் மறைந்தே போகுமாறு மழை இரைச்சலுடன் பெய்கிறது. மழையில் நனையும் விளக்கின் மங்கிய ஒளி, இருட்டில், காற்றிடையே அவனுக்குப் பல புதிய உணர்ச்சிகளைத் தருகிறது. இதுவரை அவன் கண்ட மழையைப்பற்றி உணர்ச்சி வசப்பட்டுப் பேசுகிருன். அதன் நினைவில் சூழ்ந்து, ஒன்றிப்போய் அவன் பேசும்போது அவன் கண்களில் மழை பெய்கிறது.

அவன் இப்போது இந்த வெயிலில் ஏரியினுள் நடந்து போகையில் மழையைப் பற்றி நினைத்துக் கொண்டான். தலையை உயர்த்திச் சூரியனைப் பார்த்தான். கண்ணைக்கூசும் வெறும் வெளிச்சத்தைத்தவிர அவனுக்குவேறு ஒன்றும் தெரியவில்லை. கையைக் கண்களுக்கு மேல் வைத்துத் தொலைவில் என்ன இருக்கிறது என்று பார்த்தான். ஒன்றும் இல்லை. சுற்றுமுற்றும் திரும்பி, தான் வந்த வழியைப் பார்த்துக் கொண்டபோது அவனுடைய தனிமை அவனைத் திடீரென்று தாக்கிற்று. கண்ணுக்கெட்டியவரை மனிதர்களையோ, மரங்களையோ காணவில்லை. வெயிலின் உக்கிரத்தில் அவன் கருகிக் கொண்டிருந்தான். காதோரமாக வழிந்த வியர்வை அவன சட்டையில் சொட்டிற்று. தோளிலிருந்த பையின் பட்டை வியர்வை ஒழுகிய கையில் உரசிக்கொண்டிருந்தது. நிழல் என்பதே அவனைச் சுற்றியிருந்த பரந்த பரப்பில் எங்கும் காணப்படவில்லை — கால்களடியில் அவன் நிழலைத் தவிர. கால்களை மடித்துக் குனிந்து தன் நிழலை அவன் விரல்களினுல் தொட்டுப் பார்த்தான். நிழல கொதித்தது.

மழையும் அவளும் ஒன்றுதான். இதைத்தானே அவன் கடந்த சில காலமாக அவளிடம் கூறிக்கொண்டிருக்கிருன். வெயிலில் வாடி, நாள்தோறும் மழையை எதிர்பார்க்கும் அவன், திருமபத் திரும்ப அதை அவளிடம் கூறுகிருன். எனக்கு நீயும் மழையும் இப்போது ஒன்றுதான். மழையை எவ்வளவு தவிப்போடு வேண்டுகிறேனே, அவ்வளவு தவிப்போடு உன்னை நான் வேண்டுகிறேன். என்னுல் வேறு எதையும் கற்பனை செய்து பார்க்க முடியவில்லை. மழை என்னை நிச்சயம் கைவிடாது. ஒருநாள் மழை பெய்யும். அன்றுதான் என் கொதிப்பு அடங்கும் நான் உனக்காகத் தேடி அலைந்து கொண்டிருக்கிறேன். இது என் உடம்புக்காக, சௌகரியத்திற்காகப் படும் அலைச்சல் இல்லை. நீ எனக்கு மழைதான்.

அவள் ஒவ்வொரு முறையும் மனேகரமாகச் சிரித்துக்கொண்டே தலையை அசைக்கிருள். அவளால் கொடுக்க முடிந்தால் கொடுப்பாள். அவளைச் சுற்றி வேலிகள் இருக்கின்றன. வேலிகளை அவனும் தாண்ட முடியாது; அவளும் தாண்ட முடியாது.

வெப்பத்தைத் தவிர அவனல் வேறு எதையும் உணர முடியவில்லை. காற்று நின்றேவிட்டது என்று நினைத்துக் கொண்டான். கால்கள் கடுத்தன. கண்கள் மாறி மாறி மங்கின. கருமைக் கோடுகள் கண் முன்னே நெளிந்தன. கண்கள் மங்காத சில கணங்களில் எதிரே பரந்து இருந்த மணற் தரையின் வெறுமை அவனைத் தாக்கிற்று. சற்று தொலைவில் அவனுக்கு வலது பக்கம் ஏரியின் மேடான கரை தெரிந்தது.

அவன் கால்களை இழுத்து நடந்தான். தோளிலிருந்த பை சுமையாகப் பட்டது. அதை அடுத்த தோளுக்கு மாற்றிக் கொண்டான். மாற்றிக்கொள்ளும் போதே தன்மீது ஏதோ நிழல் படிந்து நகர்வது போல் தெரிந்தது. தலையை உயர்த்திப் பார்த்தான். ஒரு பருந்து சூரியனைச் சற்றே மறைத்துப் பறந்து செல்வது தெரிந்தது. சிறிது தூரம் போன பிறகு அப்பருந்தின் நிழல் முன்னைவிடப் பெரிதாக அவனுக்கு மிக அருகில் நகர்ந்து சென்றது. மறுபடியும் தலை நிமிர்ந்து பார்த்தான். பருந்து வட்டமிட்டுக் கொண்டிருக்கும்போதே அது அவனை நோக்கிக் கீழே பறந்து வருவதுபோல் உணர்ந்தான். அவனுக்குத் திடுக்கிட்டது. தலையைச் சிறிது குனிந்துகொண்ட சமயத்தில் பருந்து அவனைக் கடந்து சென்றது. அவன் பீதியடைந்தான். என்ன செய்வதென்று தெரியவில்லை. பயத்தில் கால்கள் வெட வெடத்தன. மறுபடியும் அது அவனைக் குறி வைத்துத் தாக்குவதுபோல் கீழே வந்தது. அதன் விரித்த இறக்கைகளையும், சற்றே மூடியிருந்த கால் நகங்களையும் அவனால் சற்றுத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. அது பறந்து சென்ற மட்டத்தில் அதன் கண்கள் ஜொலித்தன. அதன் அலகு கொஞ்சம் திறந்தாற்போல் அவனுக்குப் பட்டது. அவனைத்தான் அது தாக்குகிறது என்பதைப் புரிந்து கொண்ட கணத்திலேயே அவன் உடலில் நடுக்கம் பரவியது. அவன் ஓட ஆரம்பித்தான்.

ஓடும்போதே திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டான். நிச்சயம் அது அவனைத் துரத்துகிறது. முன்னிலும் வேகமாக அப்பருந்து கீழுக்கும் மேலுக்கும் சென்றது. அவனைத் தொட்டு விடுவதுபோல் அவனுக்கு மிக அருகில் பறந்து கடந்தது. அவன் தலையையும் உடம்பையும் வளைத்துக் குனிந்தவாறே ஓடினான். அப்படி ஓடுவது மிகக் கஷ்டமாக இருந்தது. இடுப்பு வலித்தது. ஒருமுறை, அது தன்னைத் தாக்கத்தான் போகிறது என்ற தீவிர உணர்வுடன், கையைப் பின்புறம் தலைமீது வைத்துக் கொண்டு, நிமிர்ந்தானா அல்லது குனிந்தானா என்று அவனுக்கு நிச்சயமில்லாத போது அவன் கையின் பின்புறத்தை ஆழமாக ஆணியால் கிழித்தது போல வரிக்கோடாக இரத்தத்தை வெளியே இழுத்துக் கொண்டு பருந்து அவனைத் தாண்டிப் பறந்தது. அவனுக்கு உடனே ஒன்றும் தெரியவில்லை. இரத்தம் கைவழியே சொட்ட ஆரம்பித்ததும் இன்னும் வேகமாக ஓடினான்.

இப்போது அவனுக்கு எதிரே ஏரிக்கரை கொஞ்சம் அருகில் இருந்தது. கால்களை எட்டிப்போட முயற்சித்தான். பருந்து இப்போது அவன் வலப்புறமிருந்து வந்து கொண்டிருந்தது. அது வரும் வேகத்தைக் கவனித்த அவன், அதன் இலக்கிலிருந்து தப்பவில்லையென்றால் இக்கணத்திலேயே கண்ணோ, காதோ கிழிந்துவிடும் என்று நிச்சயமாக நம்பினான். தொண்டையில் ஏதோ சிக்கிக்கொண்ட மரணாவஸ்தை. கண்களுக்கு முன் ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை. எல்லாமே சுழன்றன. அவனுக்குத் திசை என்பதே மறந்துவிட்டாற் போலிருந்தது. முழு மூச்சைப் பிடித்துக் கொண்டு, அப்படியும் இப்படியும் ஆடிக் கொண்டும், குனிந்து கொண்டும் கால்களை எட்டி வைக்க முயன்றான். தோளிலிருந்த பை இடைஞ்சலாய் முழங்காலிலும், முதுகின் கீழ்ப் பகுதியிலும் இடித்தது. அதைத் தோளிலிருந்து பிடுங்கி எறிந்து கொண்டே முன்னே ஓடினான். கால்கள் பின்னுக்கு இழுத்தன. தலைகுப்புறக் கீழே விழுந்து விடுவதும் நிச்சயம் என்று அவனுக்குப் பட்டது. கண்ணை மூடிக் கொண்டு எதிரே பாய்ந்தபோது அவன் கழுத்தில் பருந்தின் கால்கள் பட்டன. பெரிய சுமையை அவன் தோள்மீது யாரோ தள்ளிவிட்டதைப் போல் உணர்ந்தான். கால்கள் தடுமாறின. உடல் அங்கம் அங்கமாய்த் துண்டித்து விழுந்து கொண்டிருக்கிறது என்று நினைத்துக் கொண்டான். கழுத்தில் மிகுந்த வலியும், ஈரமும் தெரிந்தன. இன்னும் வேகமாகக் கரையை நோக்கி ஓடினான்.

கரையை நெருங்கிக் கொண்டிருக்கையில் அது ஏரியின் ஆழமான பகுதியைச் சார்ந்தது என்பது புலப்படவில்லை. ஆனால் அதன் உயரம் அவனைப் பயமுறுத்தியது. இந்த மேட்டில் மட்டும் ஏறிக் கடந்து விட்டால்......

அவன் மனம் பதை பதைப்புடன் பறந்தது. அவன் கண்கள் கரையின் உச்சியையும், பின்னே பருந்து தொடர்கிறதா என்று பின்புறமும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டன. அவன் தலை வேகமாகத் திரும்பிச் சுழன்றதில் முன்னும், பின்னும் என்ற உணர்வையே இழந்தான். கால்களுக்கடியில் என்ன இருக்கிறது என்பது தெரியவில்லை. பருந்து இப்போது அவனுக்கு முன் புறத்திலிருந்து இறங்கிக் கொண்டிருந்தது.

கரையின் கீழ்ப் புறத்தில் நான்கு பெரிய பாறைகள் தாறுமாறாகக் கிடந்தன. பாறைகளை ஒட்டிப் பாய்ந்தான். பாறையின் மீது கையை ஊன்றிக் கொண்டவாறு காலை அழுத்தமாக வைத்து ஓட முயற்சித்தபோது பாறை அவன் கையைச் சுட்டது. அதே நேரத்தில் பாறையினடியில் அவன் கால் வைத்த சிறிய கால் சரிந்து, அவன் வழுக்கி, வேகத்துடன் சாய்ந்து மத்தியிலிருந்த பெரிய பாறையில் மோதிக் கொண்டான். விழுந்த வேகத்தில் மற்ற இரு பாறைகளில் அவன் வலது கால் சிக்கிக் கொண்டது. பதற்றம் மிகுந்தவனாய்க் கால்களை வேகத்துடன் இழுத்தான். ஒருகணம் எலும்பே முறிந்துவிட்டதுபோல் கணுக்காலில் வலி மிகுந்தது. தலை மோதிய வேகத்தில் முகம் பாறையின் கொதிக்கும் முதுகில் உராய்ந்து சுட்டது. வலது கை பாறைக்கும் உடலுக்குமிடையே சிக்கி நசுங்கியது. தடுமாறிக்கொண்டு எழுந்தவாறு வலது கையைக் கற்கள்மீது வைத்துத் தாண்ட முயற்சித்தான். வலது கையும், காலும் செயலற்றுப் போனாற் போலிருந்தது.

அவனால் ஏரிக்கரைமீது ஏற முடியவில்லை. கால் கழன்றுவிடும் என்று எண்ணினான். வலி உயிரைப் பிடித்து இழுத்தது. மிக அவசரத்துடன் ஏறினான். கால்கள் வழுக்கின. கழுத்திலிருந்தும் கையிலிருந்தும் இரத்தம் வழிந்தது. ஏரிக்கரை உச்சியை அடைந்து கொண்டே சக்கரமாகத் தலையைச் சுழற்றித் திரும்பிப் பார்த்துக் கொண்டான். பருந்து எங்கிருந்தோ அவன் அறியாமல் பக்கவாட்டிலிருந்து வந்து அவன் முகத்தில் அறைந்தது. அவன் உச்சியிலிருந்து தடுமாறி அந்தப் பக்கம் சரிந்து விழுந்தான். அவன் விழுந்த இடம் பெரிய புதர் ஒன்றின் மடியில்.

அவனுக்கு இலேசாக நினைவு வந்தபோது உடல் இரும்பாய்க் கனத்தது. கால்களை அசைக்க முற்பட்டான். சிறிதுகூட அசைக்க முடியாமல் வலி தடுத்தது. கைகளை நகர்த்தப் பார்த்தான். வலது கை முற்றிலும் செயலற்றுவிட்டது. கழுத்துப் புறத்தில் எரிச்சலும் வலியும் அவனை அழுத்தின. அந்த நேரத்தில் குளிர்ந்த காற்று வேகமாகப் புதருக்குள் வீசியது. கண்ணைத் திறக்காமலேயே அவனுக்கு வானம் கறுத்து விட்டது தெரிந்து விட்டது. மழை பெய்யப் போகிறது என்பது நன்றாகத் தெரிந்துவிட்டது. மண் வாடை காற்றில் நிறைந்திருந்தது. அவன் கண்களை மிகப் பிரயாசையுடன் திறந்தான். அவனுக்குப் பக்கமாக ஏரிக்கரை சரிந்து உயர்ந்திருந்தது. கரையின் முகட்டில் மேகங்களின் இருட்டு தென்பட்டது. உதடுகளைப் பிரிக்க முடியாதவாறு அவை உலர்ந்து ஒட்டிப் போயிருந்தன. நாக்கு ஈரப் பசையேயற்று ஒடுங்கிக் கிடந்தது.

சற்று நேரத்தில் யாரோ நடந்துவரும் ஓசை கேட்டது. திரும்ப முயற்சித்தான். வலி பிய்த்திழுக்கத்

தலையை மட்டும் கொஞ்சம் திருப்பிப் பார்த்தான். அவன் விழுந்தது எந்தப் புதரில் என்று தெரியவில்லை. கண் மங்கிப் போயிருந்தது. புதர் அடர்த்தியாக நெருங்கி—மிகச் சிறிய இடைவெளியைத் தவிர—வளர்ந்திருந்ததால் அவனால் தெளிவாகப் பார்க்க முடியவில்லை. இன்னும் சில நிமிஷங்களுக்குப் பிறகு நான்கு பேர் ஒரு கட்டிலைச் சுமந்து தடதடவென ஓட்டமும் நடையுமாக வந்து கொண்டிருந்தார்கள். அவன் வாயைத் திறந்து கூச்சலிட முயன்றான். அவர்கள் அவனைக் கடக்கும்போது அவனால் வாயைத் திறக்க முடியவில்லை. சப்தமே அவனிடம் அற்றுப் போய்விட்டது. ஆனால் அவர்களை அவன் அடையாளம் கண்டு கொண்டான். அவன் கண்முன்னே இறக்கிவிடப்பட்டக் கோணித் திரையும், முகந்தெரியாத பெண்ணின் கூச்சலும், காவியேறிய பற்களுடன் ஒரு பெண்ணும் தோன்றி மறைந்தார்கள். அவனுக்கு இது புரிந்த ஒரு கணத்தில் அவர்கள் அவனைக் கடந்து விட்டிருந்தார்கள்.

சற்று நேரத்திற்கெல்லாம் மழையின் முன்னறிவிப்பாகப் பெருங்காற்று வீசியது. ஏரியினுள்ளிருந்து எழுந்த புழுதி மண்டலம் சில கணங்கள் எங்கும் பரவியது. புதருக்கு அப்பால் சருகுகள் காற்றில் தள்ளப்படும் ஓசை கேட்டது. அவன் இலேசாக முனகினான். அவன் முனகல் அவனுக்கே சரியாகக் கேட்கவில்லை. தலைசுற்றியது. உடம்பெங்கும் வலி வாட்டியெடுத்தது. ஏதோ கனவுலகத்தில் இருப்பதுபோல் பிரமை. அவன் நடுக்கத்துடன் எழுந்திருக்க முற்பட்டான். இடுப்பின் கீழ் கால்கள் இல்லையென்பது போல, அவன் உடம்பின் கீழ்ப்பகுதி மரத்துப் போயிருந்தது. கால்களை அசைப்பதுகூட மிகத் துன்பமாயிருந்தது. அவனால் எழுந்திருக்க முடியாது. நான் இப்போது எழுந்திருக்க வேண்டும் என்று மனனம் செய்ய ஆரம்பித்தான். அந்த நினைவும் தடுமாறியது.

இடியின் ஓசை அவன் செவியைத் தாக்கியது. மேகங்களை அவன் முகர்ந்தாற்போல் உணர்ச்சி. மழை அவனருகே பெய்யப்போகிறது. தான் நீண்ட நாட்களாகத் தேடிக் கொண்டிருந்த மழை வந்துவிட்டது. காற்றின் குளிர்ச்சி அவன் உடலில் பரவியது. அவன் எழுந்திருக்க வேண்டும் என்ற உணர்வை இழந்து கொண்டிருந்தான்.

பெருத்த ஒலியுடன் மழை பெய்யத் துவங்கியது. அவன் தலைச் சுற்றல் அதிகமாயிற்று. பார்வை பஞ்சடைந்து கொண்டிருந்தது. செவிகள்கூடக் கொஞ்சம் கொஞ்சமாக மந்தமாகிக் கொண்டிருந்தன. அவன் காதில் பேரிரைச்சல் ஒருகணம் அதிகமாகி அடுத்த கணம் சட்டென வடிந்தது. அவன்மீது மழை இப்போது தாராளமாக வேகத்துடன் பெய்துகொண்டிருந்தது. அவன் நினைவை இழந்து கொண்டிருந்தான். நான் இன்று இந்த மழையில் இங்கு செத்துத்தான் போவேன் என்று சொல்லிக் கொண்டான். கடுமையான இடியொன்றைத் தொடர்ந்து மழை வீசிச் சுழற்றி அடிக்க ஆரம்பித்தது.

அன்று மாலையில் ஆரம்பித்த மழை இரவில் வெகு நேரத்திற்குப் பெய்தது. கடுமையான மழையின் அறிகுறிக்ளாக ஏரிக்குள் பெரிய நீர்நிலைகள் தோன்றத் துவங்கின.

மறுநாள் சூரியன் உதித்தபோது காற்றில் புதுமை தெரிந்தது. ஈரம் நிரம்பிய காலைக் காற்று அழுக்கெல்லாம் நீங்கிப் பொலிவுடன் வீசியது. குருவிகள் நீர்நிலையில் முக்குளித்தன. யாரோ பாட்டுப் பாடிக் கொண்டு போனார்கள். ●

## குருவும் சிஷ்யனும்

கை நீட்டித் தலையில் வைத்து
உபதேசம்செய்து முடித்த
குருவை வணங்கி
இடத்தமர்ந்த சிஷ்யனை
'விளங்கிற்று?'
என்று குரு வினவ
'விளங்கிற்று'
என்று சிஷ்யன் கூற
'என்ன விளங்கிற்று
எனக்கும் சொல்'
என்று சகபாடி கேட்டான்
'குருவே சொல்வார்'
என்று பதில் வந்தது.

—க. நா. சுப்ரமண்யம்

## ஒரு படம்

"போடா நாயே"
வார்த்தை "வெள்" என்று வெடித்தது
இதயம் படபடக்க
கண்கள் சிவந்தன.
அறிவில் குறுகுறுக்கிறது
ஒரு படம்

தொழுநோய்ப் பிச்சைக்காரனை
தன் வால் தூரிகையால்
நாய்
மனிதனைச் சித்தரித்தது.

—தி. சோ. வேணுகோபாலன்

## கர்ப்பம்

தேவர்களுக்குத்
திருஷ்டி கர்ப்பம் உண்டாம்.
நல்ல வேளை
நாமோ—
மூன்றின் விலை பதினைந்தே காசுகள் தான்!

## சந்தா

புரிகிறது: ஓராண்டும்
அரையாண்டும் கூட.
ஆயுள் சந்தாமட்டும்
புரியவில்லை.
ஆயுள்—எனக்கா? அதுக்கா?

—அம்பைபாலன்

# தற்காலத் தமிழ் இலக்கியம்

சா. கந்தசாமி

சென்னையில் பேராசிரியர் பாஸ்கரன் ஸ்டடி சர்க்கிள் 4-10-70 அன்று கூடியது. திரு. சிட்டி தலைமையில் 'தற்காலத் தமிழ் இலக்கியம்' பற்றி ந. பிச்சமூர்த்தி, சிதம்பர சுப்ரமணியம், எஸ். சங்கரன், சா. கந்தசாமி, லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி — ஆகியோர் கட்டுரைகள் வாசித்தார்கள். திரு. சா. கந்தசாமியின் கட்டுரை இது.

இன்று ந. முத்துசாமி, அசோகமித்திரன், நகுலன், சார்வாகன், நீல. பத்மநாபன், நா. கிருஷ்ணமூர்த்தி, ம. இராஜாராம், ராமகிருஷ்ணன், ஐராவதம், வே. மாலி, ஞானக்கூத்தன் எழுதிக்கொண்டு வருகிறார்கள். இவர்கள் இந்தத் தலைமுறையைச் சேர்ந்தவர்கள். போன தலைமுறையின் நம்பிக்கைகள், ஆசைகள், இலட்சியங்கள், ஐதீகங்கள், இலக்கியக்கோட்பாடுகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டுஇருக்கின்றவர்கள். இவர்களில், பலரின் திறமை இன்னும் பூரணமாக வெளிப்படாவிட்டாலும்—எனக்கு நம்பிக்கை இருக்கிறது. இவர்களின் எழுத்து நம்பிக்கை ஊட்டுகிறது. இவர்களின் இலட்சியம்கசிந்துருகுவதல்ல—வாழ்க்கையைக் குறை கூறுவதல்ல—அதைக் கை தூக்கி விடுவதும் அல்ல. வாழ்க்கையை அனுபவிப்பது—நெருங்கிப் புரிந்து கொள்வது. இலக்கியம் சரணாலயமல்ல. வாழ்க்கையில் சலிப்புவரும்போது, படித்துப் புத்துணர்வு பெறுவதுமல்ல. துன்பம் சாசுவதம்; பிரச்னைகள் சாசுவதம். காலத்திற்குக் காலம் பிரச்சனைகள் உண்டு. கஷ்டமுண்டு; இன்பமுண்டு. வாழ்க்கையை மேடு பள்ளங்களோடு மொத்தமாகக் காண்பதுதான் இலக்கியம். பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு, இவர்களின் கைகளில்தான் தமிழ்இலக்கியம் வாழ்க்கையோடு ஐக்கியம் பெறுகிறது. இவர்களுக்கு சமூக—சரித்திர—விஞ்ஞான பூர்வமான பார்வை இருக்கிறது. இதனால், வாழ்வின் ஒவ்வொரு செயலையும் இலக்கியமாக்குவதென்பது சாத்தியமாகிறது. இவர்களின் கதாபாத்திரங்கள் தன் காலத்து வாழ்க்கை முழுவதற்கும் பிரதிநிதித்துவம் பெறுகிறார்கள் என்பதை மிகவும் சிறப்பாகக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

அசோகமித்திரனின் 'விழா' — 'இன்னும் சில நாட்கள்', ந. முத்துசாமியின் 'இழப்பு' 'சூழ்நிலை', 'நடப்பு', கிருஷ்ணமூர்த்தியின் 'மனிதர்கள்', சார்வாகனின் 'சின்னூரில்கொடியேற்றம்',ராமகிருஷ்ணனின் 'அவளிடம் சொல்லப் போகிறான்', நீலபத்மநாபனின் 'தலைமுறைகள்' — இவைகளைப் படித்து அனுபவிக்க ஒரு தேர்ச்சிவேண்டும்; பழக்கம் வேண்டும். சாதாரண பத்திரிகைப் பழக்கம் இவர்களைப் படிக்கவும், புரிந்து கொள்ளவும் பயன்படாது.

தற்காலத்தில் மிகவும் கலவையாகி இருக்கும் வாழ்க்கையைப் பச்சாதாபம்ஏதுமின்றி நேராகச்சொல்கிறார்கள். மறைத்து வைத்து வெட்கமுற வாழ்க்கையில் ஏதுமில்லை என்பதுதான் இவர்கள் இலட்சியம். எதையும் இவர்கள் மிகைப்படுத்துவதில்லை. உணர்ச்சியூட்டிக் கிளுகிளுப்பு அடையச் செய்வதில்லை.

சொல்லை நேராகவும் - செட்டாகவும் பயன்படுத்துகிறார்கள். சொல்லைப் பயன் படுத்துவதில் அனாவசியமான கூச்சமும் வெட்கமும் இவர்களுக்கில்லை. இவர்களின் கவிஞர்கள் வே. மாலி, நகுலன், ஹரி - சீனிவாசன், எஸ். வைத்தீஸ்வரன், ஞானக்கூத்தன்.

ஒரு கவிதை

சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் தலைக்கொன்றாகச்
செங்கல்லில் கோயிலுண்டு; விழாக் கொண்டாடும்
திருமடங்கள் எட்டுண்டு; உன்னை என்னை
வாய் பொத்தச் செய்கின்ற பேரான் மாக்கள்
இல்லங்கள் சில உண்டு; கடைகள் உண்டு
ஆறுண்டு திருக்குளமும் பிறவும் உண்டு
மலங்கழிக்க நான்போகும் வழியின் ஊடே

இன்னும் ஒரு கவிதை

நிழலுக்காகப் பாடையின்கீழ்
பதுங்கிப் போகும் நாயொன்று

தமிழ்க் கவிதைக்கு ஓர் ஆயிரம் இரண்டாயிரம் வருஷத்து மரபு இருக்கிறது. இந்த மரபை மீறிப் பலர் கவிதை எழுதுகிறார்கள். மரபை மீறுவதாலேயே மரபுவழிக் கவிஞர்களும், பண்டிதர்களும் இக்கவிகளை ஏற்க மறுக்கிறார்கள். இன்னும் சிலர் - புதுமையை அங்கீகரிக்கின்றவர்கள் - அது வசனத்தில்தான் செய்ய வேண்டுமென்றும் - கவிதையில் மரபைப் பேணவேண்டுமென்றும் உபதேசிக்கிறார்கள். உபதேசிகளைப் பற்றி கவலை இல்லை; பண்டிதர்களைப் பற்றிக் கவலை இல்லை.

மரபு என்பதற்காக சொல் கும்பலில் திருப்தி பெற முடியாது. மரபு மட்டுமே கவிதையைக் கொண்டு வரவும் முடியாது. ஒரு கவி சொல்கிறார்,

சூளைச் செங்கல் குவியலிலே
தனிக் கல்லொன்று சரிகிறது

இந்தத் தலைமுறையினரின் விமரிசகர் வெ. சாமிநாதன். ஓரளவிற்கு க. நா. சுப்பிரமண்யம். இவருக்குத் தன் அபிப்பிராயந்தான் முக்கியம். அபிப்பிராயத்தை அழுத்தி — ஒருமுறைக்கு இரு முறையாகச் சொல்வதே இலக்கிய விமரிசனம் என்னும் சித்தாந்தத்தை உடையவர். ஆனால், வெ. சாமிநாதன் ரசனை அடிப்படையில் இலக்கியத்தை அணுகுகிறார். இவருடைய ரசனை விமரிசனத்தில், எழுத்து தனித்து நிற்பதில்லை—ஓவியம் போன்ற பிற கலைகளும் முக்கிய இடம் பெறுகின்றன. இப்போது எழுதுகின்றவர்களும் தனித்து நிற்காமல்—பிற கலைஞர்களோடு—குறிப்பாக ஓவியர்களோடு சம்பந்தப் பட்டிருப்பதால்—வெ. சாமிநாதனுக்கு அப்படிப் பார்ப்பது தவிர்க்க முடியாததாகி விட்டது.

முத்துசாமி எழுத்தில் தேடுவதும் — ஆதிமூலம் வர்ணத்தில் தேடுவதும் வேறல்ல. ராமகிருஷ்ணன் கதைகள் சொல்வதும் — பாஸ்கரன் கோடுகள்

சொல்வதும் என்ன? தாமோதரன், கிருஷ்ணமூர்த்தி, ராமானுஜம்—ஓவியங்களைப் புரிந்துகொள்ள என்ன கஷ்டம் ஏற்படுகிறதோ - அதே கஷ்டந்தான் ராம கிருஷ்ணன், வைத்தீஸ்வரன், முத்துசாமி, கிருஷ்ண மூர்த்தி - எழுத்தைப் புரிந்து கொள்வதிலும் ஏற்படு கிறது. இந்த ஓவியங்கள் எப்படி ரவிவர்மாவின் வாரிசுகள் இல்லையோ - அப்படியே இந்த எழுத்தாளர் களும் கல்கியின் வாரிசு அல்ல.

இந்த வித்தியாசத்தைப் புரிந்து கொண்டால்— புரிந்துகொள்ள சிரத்தை எடுத்துக் கொண்டால் இவர்கள் சொல்வது என்ன என்பதை அறிந்து கொள்ளலாம். ஆனால் ரவிவர்மாவின் சரஸ்வதி, இராமர் - போதும் என்கிறவர்களுக்குக் கல்கியே போதும். எஸ். வி. வியே போதும்.

போன தலைமுறைக்குக் கதை சொல்வது - ஒரு கதையை உருட்டித்திரட்டி மனம் நெகிழும்படியாகச் சொல்வதுதான் பிரதான இலட்சியமாக இருந்தது. இவர்களுக்குக் கொஞ்சம் கண்ணீர்; கொஞ்சம் சிரிப்பு; கொஞ்சம் உபதேசம் - முக்கியம். இந்தத் தத்துவத் தோடு கதை எழுதியவர்கள் கல்கி, எஸ். வி. வி. இவர் களுக்கு வாரிசு என்று இன்று எழுதுகின்றவர்களில் மு. வரதராசன், பி. எஸ். ராமையா, சாண்டில்யன், அகிலன், ஆர்வி, நா. பார்த்தசாரதி, ஜெகசிற்பியன், ராஜம்கிருஷ்ணன் என்று பலரைக் குறிப்பிடவேண்டும். யதார்த்தமான வாழ்க்கை நேரான சம்பவம் முக்கிய மல்ல இவர்களுக்கு. மிதமிஞ்சிய கற்பனை—மரபு வழி யான அறக்கோட்பாடு—தீயவை அழியும்—நல்லவை களுக்குச்சோதனை உண்டு-என்பது மாதிரியான ஏற்றுக் கொள்ளப்பட்ட மரபின் வழி கருத்துக்கள்தான் முக்கி யம். இவர்களின்கவிஞர்கள் தேசிக விநாயகம் பிள்ளை, ச. து. சு. யோகி. இன்றைக்கு எழுதுகின்ற கவிஞர்கள் கொத்தமங்கலம் சுப்பு, கண்ணதாசன், சுரதா. டி.கே.சி. இவர்களின் விமரிசகர்.

டி. கே. சி. உயர்வான கதைகள் என்று மதிப் பிட்டவைகள் கனவும், கற்பனையும், வார்த்தை அலங் காரமும் வெறும் சம்பவக் குவியலுங் கொண்டவை— அறிவை மழுங்க அடிப்பதையும் - கிளுகிளுப்பு ஊட்டு வதையும் இலட்சியமாகக் கொண்டவை என நிரா கரித்து மனிதாபிமானம், முற்போக்கு என்ற நோக் கோடு எழுதியவர்கள் புதுமைப்பித்தன், ரகுநாதன், விந்தன். இவர்களின் கவிஞர் கே. சி. எஸ். அருணா சலம். விமரிசகர்கள் ரகுநாதன், வானமாமலை, எஸ். ராமகிருஷ்ணன். அநேகமாக ரகுநாதனும் விந்தனும் படைப்பிலக்கியத்துறையிலிருந்து விலகி விட்டார்கள். பொதுவுடமை வாதிகள் இப்போது விமரிசனத்தில் ஈடு பாடு கொண்டிருக்கிறார்கள். ஆனால், குறிப்பிட்டுச் சொல்லும்படியாக ஒரு கவியும் - நாவலாசிரியரும் எனக்குக் கிடைக்கவில்லை.

இளம் தலை முறையினர் பொதுவாக உடன்பாடு கொள்ளும் எழுத்தாளர்கள் என்று, கா. சி. வேங்கட ரமணி, புதுமைப்பித்தன், கு. ப. ரா. கு. அழகிரிசாமி, மௌனி, க.நா. சுப்பிரமணியம், கிருத்திகா, தி. ஜானகி ராமன், சுந்தரராமசாமி என்பவர்களைச் சொல்ல வேண்டும். என்றாலும் கிருத்திகாவை மிகவும் சிறப் பாகக் குறிப்பிடவேண்டும். மனோதத்துவ ரீதியில் வாழ்க்கையைக் கண்டு சொல்வது இத் தலைமுறையின ருக்கு மிகவும் பிடித்திருக்கிறது.

மார்க்ஸின் கோட்பாடுகள், பிராய்டு கண்டு சொன்ன உளவியல் உண்மைகள் வாழ்க்கையை பாதித்ததுமாதிரி உலகம் முழுவதும் இலக்கியத்தைப் பாதித்திருக்கிறது. நமது சொந்த தேசத்தில் ஏற்பட்ட அரசியல், பொருளாதார சமூக மாறுதல்கள் ஐதீகங் களையும் நம்பிக்கைகளையும் தகர்த்தன. அங்கீகரிக்கப் பட்ட வாழ்க்கை, விதிக்கப்பட்ட கடமை நிராகரிக்கப் பட்டது.

ஸ்பென்ஸர் கம்பெனியில் குமாஸ்தாவாகச்சேர்ந்த வர் பின்னால் அரசியல்வாதியானார்; மடத்துக்குத் தமிழ் கற்கச்சென்றவர் பல்கலைக்கழகத்தில் பேராசிரியரானார். இது ஒரு கால கட்டத்தின் தவிர்க்க முடியாத நியதி.

முன்சீப்பும் - தத்துவவாதியும் நாவல் எழுதி ஒரு மரபை ஏற்படுத்தினார்கள். ஆனால், அந்த உயர் மரபு பேணப்படாமல் போய்விட்டது. அது மட்டுமல்ல. அதற்குமாறாக எழுத்தில் ஆழமின்மையும் - அலங்கார மும் தூக்கலாகியதோடு பின்நோக்கிச் செல்லும் ஆர் வமும் ஏற்பட்டது. சேர, சோழ, பாண்டிய, பல்லவ சாம்ராஜ்யக் கனவு - எல்லையற்ற கற்பனையோடு கதை யாக்கப்பட்டது. இந்தச் சாம்ராஜ்ய கனவு மீண்டும் நாம் ஸ்தாபிக்கவேண்டிய பொற்காலத்திற்கு ஆயத் தப் படுத்துகிறதா? நிகழ்காலத்தின் சிறுமையைச் சொல்கிறதா? இரண்டும்இல்லை. மணிமுடி, ஆஸ்தான மண்டபம், அந்தப்புரம், அந்தப்புரத்து அழகிகள், குதிரைகள், ராஜபாட்டை, யுத்தம், இவையெல்லாம் ஒருவிதத்திட்டமுமின்றி சொல்லப்படுகின்றன. அரசி யல் கட்சிகளால் ஒரு கால கட்டத்தில் ஏற்படுத்தப் பட்ட உணர்ச்சியை இன்னும் விடாப்பிடியாகப்பற்றிக் கொண்டிருப்பவை இக்கதைகள். இக் கதைகளில் இடம்பெறும் சரித்திரம் நம்முடைய மூதாதையர்களின் அக-புறவாழ்க்கையை எப்படிப்பிரதிபலிக்கவில்லையோ அப்படியே போன தலைமுறையில் பல எழுத்தாளர் களும் கவிஞர்களும் தங்களுடைய காலத்தைப் பிரதி பலிக்கவில்லை. இவர்களுக்குச் சமூக பிரக்ஞை இல்லா தது மட்டுமல்ல-தாங்களாகவே ஒரு முடிவையும் எடுக்க வில்லை. கண்முன்னே நிகழும் சம்பவங்களையும் - மாறு தல்களையும் புறக்கணித்துவிட்டு மரபை பற்றிக் கொண்டு சென்றார்கள். எனவேதான் இவர்கள் எழுத்துக்களில் காலத்தின் சுவடு பதியாமலே போய் விட்டது.

முப்பதாண்டுகளில் இந்த வீழ்ச்சியைப் பிரதான மாகக் குறிப்பிடவேண்டும். தங்களின் தனித் தன் மையை இழக்கப்பலரும் தயங்கவே இல்லை. பத்திரிகை என்னும் வாகனம் பணத்தையும் புகழையும் கொண்டு வரும் பிரதானசாதனமாகிவிட்டவுடன்-அதில் பலருங் கரைந்துவிட்டார்கள். பத்திரிகைகள், படிக்கும் பழக் கத்தை உண்டாக்கின. ஆனால் வளர வளர இலக் கிய பூர்வமாகச் சிந்திக்கும்வழக்கத்தை மழுங்கஅடித்து விட்டன. கனமான விஷயம் எதுவும் தங்கள் பத்திரி கையில் வெளியாகக் கூடாதென்று பெரும் பத்திரிகை ஆசிரியர்கள் கவனமாகப் பார்த்துக் கொண்டார்கள். இன்றைக்கும் இப்படித்தான் இருக்கிறார்கள். பத்திரி கைகள் மட்டுமல்ல, சாகித்ய அகாடமி - தமிழ் வளர்ச் சிக்கழகமும் இப்படித்தான் இருக்கின்றன. இதன்பரிசு பெற்ற நூல்களுக்காக நாம் வெட்கம் அடைகிறோம். அறிவு மழுங்கி இருப்பதையும் - இலக்கியம் என்பதை அறியும் ஆற்றலின்மையையும் காட்டும் சாட்சிகள் இவைகளின் தேர்வு. எந்த ஒரு அசல் எழுத்தாளனும் இந்த ஸ்தாபனங்களால் கௌரவிக்கப்படவில்லை. காலம் கடத்திக்கொண்டு வருவதாலேயே கௌரவிக் கக் கூடிய யோக்கியதையைக்கூட இந்தநிறுவனங்கள் இழந்துவிட்டன. நல்ல புத்தகங்கள் பரிசு பெறுவது மட்டுமல்ல பத்திரிகையில் வெளிவந்திருப்பதாகக்கூட எனக்குத் தெரியவில்லை.

## மூன்று கவிதைகள்

### வட்டம் (1)

வாழ மனமில்லை
சாக இடமில்லை;

வானில் மேகமில்லை;
ஆனால்
வெய்யிலும் மடிக்கவில்லை;

கந்தைக் குடைத்துணியெனக்
கிடக்கும்
தன்னினமொன்றைச்
சுற்றிச் சுற்றி வருமிக்
கறுப்பின் ஓலம் போல்

செத்துக் கிடக்கும்
சுசீலாவை
வட்ட மிட்டு
வட்ட மிட்டு
வட்ட மிட்டு......

### வட்டம் (2)

பேனாவுக்கு மைபிட்டு
அதன் முனைதீட்டி
வெள்ளைக் காகிதத்தை
மேசை மீது விரித்து;
எழுத வருங்
கால்
பேனாவின் முனை
மூளையின் மண்டைக்
கனத்தில்
குடை சாயும்;
வெள்ளைக் காகிதத்தின்
வைரத் திண்மையில்
அதன்
கூர் மழுங்கும்;

சேலை அவிழ்க்
கலாமென்று
லோ
சுசீலாவும் செத்துக்
கிடக்கின்றாள்

### வட்டம் (3)

என் எழுத்து
நேற்றில்லை
இன்றில்லை
நாளையில்லை;
ஏதோ நாவல்
ஏதோ கதை
என்றெழுதிய
வையும்
குப்பைக் கூடையின்
ஏக வாரிசு;
என்றாலும் என்ன?

சுசீலாவே
செத்துவிட்டாள்
என் எழுத்து மறைந்தபின்
நான்
இருந்தென்ன
இல்லாமல் போனால்
தான்
என்ன?

'நகுலன்'

---

# தற்காலத் தமிழ் இலக்கியத்தில் புதுமை

ஒ லூ லூ

இப்படியே போய்க்கொண்டிருந்தால் தமிழ் இலக்கியம் உருப்படாது என்பது நமக்குத்தெரியும். இதைத் திரும்பத் திரும்பச் சொல்வதில் கொஞ்சம் கூடப் பயனில்லை என்பதும் நாம் அறிந்ததுதான். எனவே இன்னொருமுறை சொல்லிவிட்டுப் போவதற்காக வரவில்லை நான். இப்படியே போவதென்றால் என்ன என்றும் எப்படிப் போகவேண்டும் என்றும் பார்ப்பது தான் என் வேலை.

எந்த மொழியிலும் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் பல நிலைகளில் தரம் பிரிக்கக்கூடிய படைப்புக்கள் எழுவது இயல்பு. ஒரு குறிப்பிட்ட படைப்பாளியாக எல்லாப் படைப்புக்களையும் ஆராய்ந்தாலும் இந்தப் பலநிலை இயல்பு புலப்படும். எடுத்துக்காட்டாக, லா. ச. ரா. வின் எல்லாம் ஒரேதர நிலையில் இல்லை; கோவி. மணிசேகரனின் கதைகளும் அப்படித்தான். பலருடைய படைப்பு அடங்கிய தொகுப்பிலும் நாம் ஒரே தர நிலையைக் காணமுடியாது. நற்றிணை என்னும் எட்டுத்தொகை நூலில் ஒன்றை எடுத்துக்கொண்டால் அதிலுள்ள எல்லாப் பாடல்களும் பல தர நிலைகளில் பிரிந்து நிற்கின்றன.

ஒரு குறிப்பிட்ட எழுத்தாளருடைய படைப்புக்களில் காணும் தர வேறுபாட்டைவிட பலருடைய படைப்புக்களின் தொகுப்பில் தர வேறுபாடு அதிகமாக இருக்கும். (ஒரு கோணத்தில்தான் இது சரி; இன்னொரு கோணத்தில் இது தவறாகிவிட முடியும் என்பதையும் சொல்லவேண்டும்) பின்னதில் உள்ளதை ஒரு காலகட்டத்தில் எழுகின்ற படைப்புக்களில் தர வேறுபாடு மிக மிக மிக அதிகமாக இருக்கும்என்பதில் சந்தேகமில்லை.

20-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய தமிழ்ப் படைப்புக்களில் இந்த உண்மையைக் காணலாம். இலக்கியத் துறைகளில் ஒன்றான கவிதையை மட்டும் எடுத்துக்கொண்டு பார்க்கலாம். பாரதி, கவிமணி, ராமலிங்கம்பிள்ளை, பாரதிதாசன் என்று பலதர நிலை காணமுடியும்.

எனவே தற்காலத் தமிழ் (1950முதல்) இலக்கியத்திலும் நாம் பல்வேறு தர நிலையுடைய படைப்புக்களை எதிர்பார்க்கலாம்; எதிர்பார்த்துத்தான் தீர வேண்டும்; எதிர்பார்க்காமல் இருப்பதுதான் தவறு. தற்காலப் படைப்புக்களைக் கவனிக்கும் போது பல தர நிலைகளை நாம் பார்க்கத்தான் செய்கிறோம். ஆனால் –

இந்த இடத்தில்—கூடிய மட்டும் தெளிவாக அறிந்துகொள்ள வசதியாக இருக்கும் பொருட்டு—ஒரு மதிப்பீட்டு முறையைச் சொல்லி வைக்கவேண்டும். படைப்புக்களை, இறங்கு வரிசையில், சிறந்த, முதல்தர, இரண்டாம்தர, சராசரி, அல்லது மூன்றாந்தர, படைப்புக்கள் என்று பிரித்துக் கொள்வோம். சராசரிக்குக் கீழே நான்காந்தர முதல் பலதரங்கள் வைத்துக் கொள்ள முடியும் என்றும் கொள்வோம்.

இந்த மதிப்பீட்டு முறையில் பார்த்தால், மற்ற மொழியிலுள்ள காலத்தைப் போலவே தமிழில் தற்காலத்தில் நான்காந்தர, ஐந்தாந்தரமென்று கூறிக் கொண்டே போகக்கூடிய சராசரிக்குக் கீழுள்ள படைப்புக்களை மிக அதிகமாகவும், மூன்றாந்தர படைப்புக்களை அதிகமாகவும்; இரண்டாந்தர முதல் தரப் படைப்புக்களைக் குறைவாகவும், சிறந்த படைப்புக்களை மிகக் குறைவாகவும் பார்க்க முடியவேண்டும். ஒரு காலக்கட்டத்தின் இலக்கியப்பெருமை அல்லது சிறப்பு அக்காலத்தில் எழுகின்ற சிறந்த, மற்றும் முதல்தர படைப்புக்களின் எண்ணிக்கையைப் பொறுத்துள்ளது என்பதையும் நாம் நினைவில் கொள்ளவேண்டும்.

இனி தற்காலப் படைப்புக்களைப் பார்க்கலாம். ஏணி வைத்துத்தூக்கி விட்டாலும் கடைசித்தரத்தைத் தொடமுடியும் படைப்பிலிருந்து நான்காந்தரபடைப்பு வரையிலும் நாம் மிகமிக மிக அதிகமாகப் பார்க்கிறோம். நாம் எதிர்பார்த்ததைப் போலவே, மூன்றாந்தரச் சராசரிப்படைப்புக்களும் அதிகமாகவே தென்படுகின்றன; இரண்டாந்தர படைப்புக்களும் மிக குறைந்தும், முதல்தரப் படைப்புகள் மிகமிக அருகியும் விடுகின்றன; சிறந்த படைப்புக்களை நாம் தேடிக் கொண்டே இருக்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இந்த நூற்றாண்டு முழுவதையும் எடுத்துப் பார்த்தாலுங்கூட சிறந்த படைப்பு தென்படுவது அருமையாக இருக்கிறது. முதல்தரப் படைப்புக்கே தடுமாறும் நேரத்தில் சிறந்த படைப்புக்கு எங்கே போவது?

உள்ளது சிறத்தல் அல்லது பரிணாம வளர்ச்சி என்பது ஓர் உயிரியல் கோட்பாடு; மனித இயலுக்கும் இது பொருந்துவதாகத்தான் இருக்கவேண்டும். இதற்கும் மேலே அடுத்தநிலை என்ன, என்ன என்று படைப்பாளிகள் செல்வார்கள் என்று நம்புவதில் தப்பில்லை. பலநாடுகளில் பல படைப்பாளிகள் அப்படித்தான் செல்கிறார்கள். இதற்கும் கீழே அடுத்தநிலை என்ன என்ன என்ன என்று செல்லும் தமிழ்ப்படைப்பாளிகள் தான் இன்று ஏராளம். இவர்களில் பெரும்பாலோர் அந்த உயிரியல் கோட்பாட்டைப் பின்பற்றத்தான் செய்கிறார்கள், தலைகீழாக.

தமிழ்ப் படைப்பாளிகள் பலருக்கும் இந்தமயக்கம், இந்த திருப்தி எப்படி ஏற்பட்டது என்று கேட்கலாம். இதற்கு இரண்டு முக்கியமான காரணங்கள் தோன்றுகின்றன. ஒன்று: அனைத்துலக இலக்கிய அளவுகோலிலுள்ள சராசரி அளவுக்கோட்டை நமது இலக்கிய அளவுகோலில் சிறந்த அளவுக்கோடாக்கிவிட்டு, உண்மையிலேயே சராசரிப் படைப்பைச் சிறந்த படைப்பு என்று மயங்கித் திருப்திபட்டுக் கொள்கிறார்கள். சராசரிப் படைப்பே சிறந்த படைப்பாகும்போது இரண்டாந்தர, முதல்தரப் படைப்புக்கள் உலகத்துச் சிறந்த படைப்பாகவும் அனைத்தண்டச் சிறந்தபடைப்பாகவும் மாறுவதில் வியப்பில்லை. இந்த மயக்கத்தின் விளைவாகத்தான் தேசிகவிநாயகம்பிள்ளை கவிமணியாகவும், பாரதி உலக மகாகவியாகவும் விசுவரூபம்எடுக்க முடிகிறது.

இரண்டாவது காரணம்: நமது இயல்பு, நமக்கே உரித்தான, பல்லாண்டுகளாக ஊறிப்போன இயல்பு. சுயமாக சிந்திப்பதை நீக்கிவிட்டு, போலச்செய்தல் அல்லது பின்பற்றல் என்ற கோட்பாட்டை உயிரினும் மேலாக ஓம்பி நடக்கும் இயல்புதான் நம் முன்னேற்றத்திற்கு பல துறைகளிலும் தடையாக இருக்கிறது; அதுவேதான் இலக்கியத் தேக்கத்திற்கும் காரணமாகிறது என்று சொல்லவேண்டும். நெற்றியில் நீறு நாமமோ பூசுவதிலிருந்து மாபெரும் கிருதா வைத்துக் கொள்வது வரை (ஒரு எழவும் புரிந்து கொள்ளாமல்) இந்த இயல்புதான் வேலை செய்கிறது; ஒரே சந்தில்

பத்து தையற்கடைகள் அல்லது வட்டிக்கடைகளுக்கும் இதுதான் காரணம்; இதன் விளைவுதான் கல்கி மாதிரியே எழுதுவது, பாரதி மாதிரியே இயற்றுவது முதலியன.

## II

இலக்கியத் துறையில் இருப்பது போன்ற ஒரு தப்புக் கணக்கு, நல்லவேளை, அறிவியல் துறைகளில் இல்லை. மற்றொருவர்சொன்னதைஎடுத்துரைப்பதிலும் அல்லது செய்து காட்டியதைத் திரும்பச் செய்வதிலும் பெருமை இருப்பதாக யாரும், அறிவியலைப் பொறுத்த வரை நினைப்பதில்லை. ஒவ்வொரு வினைக்கும் எதிர் வினை உண்டு என்பதை விளக்கும் பௌதிகப் பேராசிரியர் தன்னை நியூட்டன் என்று எண்ணிக்கொள்வதில்லை; மற்றவர்களும் அவருக்குப் பௌதிக அறிஞரின் பெருமை இருப்பதாக நினைப்பதில்லை. அறிவியல் துறையில் பெருமை பெறுவதற்குத் தானாக ஒன்றைப் புதிதாகக் கண்டுபிடிக்கவேண்டும் அல்லது இதுவரை தெரியாமல் இருந்ததை முதல் முறையாக இனங் கண்டு அறிவிக்க வேண்டும் அல்லது புதிய கருத்தை, முழுமையாகவோ பகுதியாகவோ, நிறுவ வேண்டும் என்பது எல்லோருக்கும் புரிந்திருக்கிறது. சுருங்கச் சொன்னால், அறிவியல் துறைகளில் பெருமைக்கு அடிப்படையானது புதுமைதான்.

இது தத்துவம், கலைகள் போன்ற மற்றதுறைகளுக்கும் பொருந்தும் என்பதை நாம் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

தத்துவத்தில் ஜே. கிருஷ்ணமூர்த்திக்குத்தான் பெருமை உண்டு; இந்தியத் தத்துவத்தைப் பல நூல்களின் வழியாக அனைவருக்கும் தெரியப்படுத்த முயன்ற டாக்டர் ராதாகிருஷ்ணனுக்குப் பெருமை இல்லை. ராதாகிருஷ்ணனின் பெயர் தத்துவ வரலாற்றில் இடம் பெறாது; தத்துவ உரைகளின் வரலாற்றில் தான் அவர் பெயர் வரமுடியும். நமக்குத் தத்துவ ஞானிகளும் தத்துவ உரையாசிரியர்களும் வேண்டும்; ஆனால் இங்குள்ள பிரச்னை: உரையாசிரியர்களை நாம் ஞானிகளாக ஏமாந்து ஏற்றுக் கொள்வதில்லை.

கலைகளில் ஒன்றான ஓவியத்தில் மைக்கேல் ஏஞ்சலோ, டாவின்சி என்று தொடங்கி வான்கோ, பிகாசோ என்று பார்க்கிறோம். இவர்களைப் போன்றவர்கள் செய்த சாதனைகளின் பட்டியல்தான் ஐரோப்பிய ஓவிய வரலாறு என்பது முதல் சிந்தனையிலேயே புலனாகும். தமிழ் நாட்டில் ''கல்கி'' மூலம் எல்லோருக்கும் தெரியவந்த மணியத்தின் பெருமை அஜாந்தா ஓவியங்களையும் கோவிற்சிலைகளையும் பிரதி எடுத்ததால் கிடைக்கவில்லை என்பதும் தெரியவரும்.

இசைக் கலையில் ஜாஸ் என்றும், பீட்டில்ஸ் இசை என்றும், இப்போது இந்தோ - மேற்கு இசை என்றும் பேசுகின்ற வாய்ப்பு புதுமை தந்ததுதான். ஒரு குறிப்பிட்ட திரைப்பாடலைச் சில முறை கேட்டதும் அலுப்பு தட்டுகிறது; மதுரை சோமுவின் தோடியைப் பலமுறை கேட்டாலும் அலுப்பதில்லை; ஏனென்றால் ஒவ்வொருமுறை பாடும்போது தோடியில் புதுமை கிடைக்கிறது. அதனால் திரையிசையைவிடக் கர்நாடக இசை சிறந்தது என்று கூடச் சொல்லத் தோன்றும். திரையிசை என்று பார்த்தாலும் கூட, தானாகவே அல்லது கொஞ்சம் மூலத்தைமாற்றி மெட்டு அமைப்பவருக்குள்ள மதிப்பு வேற்றுமொழி மெட்டைப் பிரதி எடுப்பவருக்கு இல்லை. இன்றுள்ள இசையமைப்பாளர்களை எடுத்துக்கொண்டால், விஸ்வநாதனுக்குள்ள பெருமை வேதாவுக்கு இல்லை.

இங்கே இன்னொரு செய்தியைக் குறிப்பிடலாம். ஒரே ராகத்தை ஒரு கலைஞன் இசைக்கும் போதெல்லாம் அந்த ராக வரம்புக்குள் புதுமை செய்கிறான் என்று பார்த்தோம். அதையே இரண்டு கலைஞர்கள் இசைக்கும்போது, இருவரும் புதுமை செய்கிறார்கள் என்ற காரணத்தால் இருவருக்கும் சமமான மதிப்பையே தரவேண்டும் என்று ஆகிறது. ஆனால் உண்மையில் இது முடியக் கூடியதல்ல. ஸ்ரீ ரஞ்சனியை ஏமனி சங்கர சாஸ்திரியும், பாலச்சந்தரும் வாசிப்பதாக வைத்துக் கொள்வோம். நான் பாலச்சந்தருக்குத்தான் அதிகப் பெருமை தருவேன். ஏனென்றால் ஏமனியிடம் இல்லாத ஒன்று இவரிடம் உண்டு: இவர்தான் வாய்ப் பாட்டின் இயல்பை வீணையில் புகுத்துகிறார்.

இலக்கியத்திலும் புதுமைதான் அடிப்படை ஆகிறது. தமிழில், தொடக்கநிலை நோக்கான யாப்பு நோக்கில் பார்த்தால், ஆசிரியம், கலி, வஞ்சி, வெண்பா, பாவினம், சந்தம் என்று கவிதை வளர்ந்திருக்கிறது. ஆசிரியத்தை அடிப்படையாகக்கொண்ட சிலம்பும் மேகலையும் தனித்தனியான புதுமைகள்; ஒன்று மற்றதின் பிரதியல்ல; ஒன்று மற்றதின் பிரதியாக இருந்திருந்தால் பிரதிக்குப் பெருமை கிடைத்திருக்காது. ஜேம்ஸ் ஜாய்ஸின் 'யுலிசீஸ்' மாதிரி இன்னொரு நாவலைத் தமிழ்ப் படைப்பாளி எழுதி (ஒரு பேச்சுக்கு எழுதுவதாகவைத்துக்கொள்வோம், எழுதி) பெருமை பெற முடியாது; பாரதிபோலப் பாடிப் பயனில்லை; புதுமைப்பித்தன் மாதிரியே எழுதி இலக்கியத்தில் இடம் பிடிக்க முடியாது.

அறிவியல் துறைகளில் மட்டுமில்லாமல் வேறு துறைகளிலும் வளர்ச்சிக்குரிய சூழலைப் பிரதி எடுத்தல் அல்லது போலச் செய்தல் தருவதில்லை; புதுமைதான் தருகிறது. (புதுமையெல்லாம் வளர்ச்சி என்று சொல்ல வேண்டியதில்லை; ஆனால் புதுமை இல்லாமல் வளர்ச்சி முன்னேற்றம் இல்லை.) எனவே எல்லாத் துறைகளின் முன்னேற்றமும் இந்தப் புதுமை செய்வதால்தான் விளைந்திருக்கிறது. ஒவ்வொரு துறையின் வரலாறும் இந்த முன்னேற்றத்தைப் பற்றிய அறிவிப்பாகவே இருப்பதால் அந்த வரலாற்றைப் புதுமைகளின் பட்டியல் அல்லது புதுமை செய்தோரின் பட்டியல் என்றே சொல்லலாம்.

இவ்வளவு இன்றியமையாததாக இருக்கின்ற புதுமை செய்வதன் அடிப்படை என்ன என்று கேட்கத் தோன்றுகிறது. அனைவருடனும் ஒட்டி ஒழுகாமல், தானே தனது சிந்தனையை நிகழ்த்தி மாறுபட்டு வெட்டி விலகுவது என்பதுதான் இதற்குப் பதிலாக இருக்க முடியும். தன் காலத்திய பழக்க வழக்கங்களை, சடங்குகளை, பொதுக் கருத்துக்களை அப்படியே ஆமாம் போட்டு ஏற்றுக்கொள்ளாமல் அவற்றைச் சீர்தூக்கிப் பார்ப்பதற்கு அடிப்படையாக இருப்பது இந்த வெட்டி விலகுவதுதான். இது இல்லாமல் எந்தப் புதுமையும் நிகழ வழிஇல்லை. (யாருக்கு வெட்டி விலகத்தெரியுமோ அவருக்குத்தான் உண்மையிலேயே ஒட்டி ஒழுகத் தெரியும்; வெட்டி விலகலுக்குத் துணை புரிகின்ற அதே மெய்ப்பொருள் காணும் அறிவுதான் ஒட்டி ஒழுகுவதற்கும் துணைபுரியும்; ஒட்டி ஒழுகுதல் என்ற அடித்தளத்தில்இருந்துதான் வெட்டி விலகுதலே எழுகிறது என்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும்.)

## III

புதுமை செய்வது என்பது நினைத்தவுடன் முடிவதில்லை. வழக்கமாக பர்க்கலி வாங்கிப் பிடிக்கும் ஒருவன்

புதிதாகப் பிளேயர்ஸ் வாங்கிப் பிடிக்கும் காரியமல்ல இது.

ஐன்ஸ்டின் பெயரையும் $E=mc^2$ என்ற சமன்பாட்டையும் தெரிந்துகொண்ட மாணவன் (புதுமை செய்யும் நோக்கத்தில்) உடனே பௌதிகத்தை அடுத்த கட்டத்திற்கு முன்னேற்றும் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதி முடிக்க உட்காருவதில்லை. ராமானுஜத்தின் பெயரைக் கேள்விப்பட்ட ஒருவன் கணக்கு வரலாற்றுக்குப் புதிய அத்தியாயத்தைச் சேர்க்கும் சக்தி வந்து விட்டதாக செயற்படுவதில்லை. பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஒருநாள் ஆப்பில் விழுவதைப் பார்த்ததும் நியூட்டன் புவியீர்ப்புக் கொள்கையைக் கண்டு பிடித்து உடனே அறைக்கு ஓடி பிரின்சிபியா மேதமெடிக்காவின் மூன்றும் பகுதியை எழுதிவிட்டதாகயாரும் நினைப்பதில்லை.

அறிவியல் துறைகளில் அடுத்த அடி எடுத்து வைப்பதற்குப் பழையது தெரிந்திருக்கவேண்டும் என்பதும் பிறகு ஆராய்ச்சியும் சோதனையும் வேண்டும் என்பதும், இந்தஇரண்டு இயல்புகள் இல்லாமல் புதியவை தோன்றுவதில்லை என்பதும் நாம் உணர்ந்திருக்கிறோம். கலைத்துறைகளிலும் புதுமை செய்ய இவைகள் தேவை என்று உணர்ந்திருப்பதாகத் தெரியவில்லை.

மோனலிசாவைத் தீட்டுவது என்று முடிவுகட்டிய டாவின்சி உடனேவேலையைத்தொடங்கி, நெஸ்கஃபே போட்டுக் காபிகலக்கும் வேகத்தில் திடீர் ஓவியம் தயாரித்து விட்டதாக எண்ணுவது போல்தான் எனக்குப் படுகிறது. ஒருநாள்பாலசந்தர், வாய்ப்பாட்டுநயத்தை வீணையில் கொண்டு வந்து காட்ட நினைத்து அதற்கு முன்னால் வீணையைத் தொடாதவர் உடனே அதை எடுத்து தான் விரும்பியதைச் செய்து விட்டது போல பலர் நினைப்பதாகத்தான் தோன்றுகிறது. ஜீன் பால் சாத்ரே புதுமைசெய்யும் எண்ணம் வரும்வரையில் தற்குறியாக இருந்த மாதிரியும், வந்த உடனே எக்ஸிஸ்டென்சியலிஸத்தை உருவாக்கிவிட்டு, பிரஞ்சு மொழியைக் கற்று புத்தகமும் நாவலும் நாடகமும் எழுதிவிட்ட மாதிரியும் நினைப்பதாகத்தான் நான் உணர்கிறேன்.

ஆனால் உண்மையைச் சொல்வதென்றால் அறிவியலில் பழையது தெரிந்திருக்க வேண்டும் என்பதும் ஆராய்ச்சியும், சோதனையும் வேண்டும் என்பதும் எவ்வளவு தேவையோ அவ்வளவுதேவை கலைத்துறைகளிலும் என்றுதான் சொல்ல வேண்டும். இவைகள் இரண்டும்இல்லாமல்டாஸ்டாவிஸ்கியின் குற்றமும் தண்டனையும் உருவாகவில்லை; இவைகளின்றி டி.எஸ். எலியட்டின் 'பாழ்நிலம்' தோன்றவில்லை; இவைகளின் துணை இல்லாமல் பாலமுரளிகிருஷ்ணா பாடவில்லை. ரவி சங்கர் சிதார் வாசிக்கவில்லை என்பதை நினைவில் கொள்வதே இல்லை. தமிழ்ப் படைப்பாளிகளும் நினைவில் கொள்வதில்லை, தமிழ் வாசகர்களும் விமரிசகர்களும் நினைவில் கொள்வதில்லை.

ஊமையாக இருந்து (திரைப் படத்தில் காட்டிய மாதிரி) தேவி வரம் பெற்றதும் ஆனாவிலிருந்து தொடங்கி கவிதை இயற்றும் ஆற்றலை ஒரு சிலவினாடிகளில் பெற்றுவிடுகிற படைப்பாளி, உணர்ச்சி வயமாகி ஒரு வாசகத்தைச் சொல்லி வரம்பெற்று பாரதம் பாடிவிடுகிற வியாசர் போன்ற மேதைகள் மிக அபூர்வமாகவே தோன்றுகிறார்கள். எந்த ஒரு குறிப்பிட்ட காலத்திலும் ஒரேஒரு மேதை இருப்பது மிகவும் அசாதாரணமாகும், தமிழ் நாட்டில் தவிர.

மேதைமை என்பதற்கு இன்னொரு வழியாகவும் பொருள் சொல்வதுண்டு. உழைப்பு, சலியாத உழைப்பு, எந்தத் தொல்லைக்கும் சளைக்காத உழைப்பு என்பார்கள். (இந்த உழைப்பு, இருப்பதை அறிந்து கொள்வதிலும், பயிற்சி ஆராய்ச்சி சோதனையிலும் செயற்படும் என்று சொல்லிவிடலாம்.) இது மாதிரி உழைப்பால் உயரும் மேதைகள் கூட ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு சிலர்தான் இருக்க முடியும் என்பார்கள். இவற்றையும் எல்லோரும் ஒத்துக் கொள்வார்கள், தமிழ் இலக்கிய நண்பர்கள் தவிர. இவர்களுக்கு மட்டும் மேதைமை பரவலாக நிகழ்கிற வரப்பிரசாதம்; ''கருவிலே திரு'' இல்லாமல் இங்கே எழுதுபவர்கள் அபூர்வம். 'தினமணி சுடர்'ரில் ஐந்தாறு பாடல்களைப் படித்து விட்டுச் சாகா வரம்பெற்ற கவிதை புனைபவர்கள், ஒன்றிரண்டு ரேடியோ நாடகங்களைக் கேட்டு விட்டுக் காலத்தைவென்று நிற்கும் நாடகம் இயற்றுபவர்கள், 'குமுத'த்தில் நான்குகதைகள் படித்துவிட்டுச் சிறுகதைக்கு இலக்கணமாகத் திகழும் கதை உருவாக்குபவர்கள், காஃப்காபற்றி கேள்விப்பட்ட மறுகணமே 'காஸ்ல்'-ஐ மிஞ்சும்நாவல்படைப்பவர்கள், ப்ராய்டின் பெயர் தெரிந்ததும் தனது படைப்பை உளவியல் சுத்தமாகத்தருபவர்கள், நனவோடைஎன்று படித்தவுடன் நனவோடை இலக்கியம் தீட்டுபவர்கள்—இப்படி தமிழ் இலக்கியத் துறையில் பலவகையானமேதைகள்.

ஒரு மொழியின் தொடக்க காலத்தில் எழுதும் படைப்பாளிக்குச் சில நன்மைகள் உண்டு: அவன் படிக்க வேண்டியவை குறைவு; பிரதி எடுக்கும் இயல்புக்கு ஆளாகாமல் எளிதாகத் தப்பித்துக் கொள்ளும் வழிகள் அதிகம். நல்ல இலக்கிய வளமான மொழியில் பல நூற்றாண்டுகள் கழிந்த நிலையில் எழுதும் படைப்பாளிக்குத் தொல்லைகள் நிறையஉண்டு; படிக்க வேண்டியவை அதிகம்; வழிகள் குறைவு. கடுமையான உழைப்பு இல்லாமல் இவன் ஒன்றுமே சாதிக்க முடியாது. இவனுக்கு ஆசைமட்டும் போதாது; ஆசையோடு திறமை இருந்தாலும் போதாது; பரவலான (தன்மொழி மற்றும்பிறமொழி) இலக்கியத்தொடர்பும் எளிதில் திருப்தியடையாத அசுரத்தனமான பயிற்சியும் தேவை. இதையும் எல்லோரும் ஒத்துக்கொள்வார்கள், தமிழ்ப் படைப்பாளிகள் தவிர.

இந்த நிலையில் தமிழ் இலக்கியத்தில் எவ்வளவு தூரம் புதுமைகளை எதிர்பார்க்கமுடியும்? வெட்டி விலகுவதால்விளைகின்றபுதுமைகள்பெருகினால்தான் இரண்டாம்தர, முதல்தரப் படைப்புக்களின் எண்ணிக்கை அதிகரிக்க வாய்ப்பு உண்டு; அப்போதுதான் சிலகுறிப்பிட்ட வகையான படைப்புக்களே யன்றி பலவகையான படைப்புக்களும் தோன்றுவதற்கு வழி உண்டு. பாலைவனத்தின் பயங்கரத்தை அதிகமாக்கும் ஈச்சை மாதிரி ஒருசிலர், விதிவிலக்காக, சிலபுதுமைகள் செய்வதால் தற்காலத் தமிழ் இலக்கியம் வளம் பெற்றதாக ஆகிவிட முடியாது. விதிவிலக்குகள் அதிகமாகப் பெருகினால்தான் தற்காலத் தமிழ் இலக்கியம் வளம் பெறுவதற்கு வழி தென்படும்.

விதிவிலக்குகளின் பெருக்கமே இலக்கிய வளம் என்று சொல்லமுடியாது. ஏனென்றால் ஒரு படைப்பின் பெருமைக்குக் காரணம் புதுமை செய்தல்தான் என்றாலும், புதுமையின் பெருமை அதனுடைய சாதனையளவுதான், அதனுடைய உள்மதிப்பு அளவுதான். ஆனால் சாதனையளவும் உள்மதிப்பளவும் எல்லாவற்றிலும் ஒரே மாதிரி இருப்பதில்லை; இவற்றின் அளவைப் பொருத்துத்தான் அதன் பெருமையைத் தீர்மானிக்க முடியும். இவை கொஞ்சமும் இல்லாத ஒன்றைப் புதுமை என்பதைவிட பிறழ்ச்சி என்பதே சரியாக இருக்கும். அதனால்தான் தற்காலத் தமிழ் இலக்கியம் வளம்பெறும் என்று உறுதியாகச் சொல்லாமல் வளம் பெறுவதற்கு வழிதென்படும் என்று சொல்ல வேண்டியிருக்கிறது.

# நோபல் பரிசும் மார்க்சிசப் பரிசும்

ஞானக்கூத்தன்

எட்டாண்டுகளுக்கு முன்பு ‘நாவிமிர்’ என்ற ருஷிய ஏடு அலெக்ஸாண்டர் ஸால்ஜெனிட்ஸினின் படைப்புகளை வெளியிட்டது. 1956-ல் சிறை வாசத்திலிருந்து (அதன் காரணம் உங்களுக்கு ஒருபோதும் நிறைவு தராது) மீண்ட பிறகு ஸால் ஜெனிட்ஸின் எழுதத் தொடங்கியிருந்தார். ‘இவான் டெனிஸோவிச்சின் வாழ்க்கையில் ஒருநாள்’ என்ற நாவல் ‘நாவிமிர்’ரில் வந்ததும், வெளிவந்த சில மணி நேரங்களில் அந்த ஏடு முழுவதும் விற்றுத் தீர்ந்துவிட்டது. ‘மாட்ரியானாவின் வீடு’, ‘முதல் சர்க்கிள்’, ‘கான்ஸர் வார்டு’ ஆகியவை ஸால் ஜெனிட்ஸினின் படைப்புகள். பல வசன கவிதைகளையும் அவர் எழுதி இருக்கிறார்.

ஸால்ஜெனிட்ஸின் என்றால் மார்க்சிச சித்தாந்திகளுக்கும், சோவியத் அரசாங்கத்தின் மீசை முறுக்கிகளுக்கும் அடிநாக்கில் கசப்புத் தட்டும். அதிகார பூர்வமான ரஷிய சித்திரத்துக்கும், இவரதுக்கும் வேற்றுமை இருப்பதுதான் காரணம். காரணம் தெரிவிக்காமலும், அரசியல் காரணங்களுக்காகவும் கைதிக் களங்களுக்கு ஸ்டாலின் காலத்தில் அனுப்பட்டவர்களின் வாழ்க்கையில் ஒரு நாளை விவரிக்கிறது ‘டெனிஸோவிச்சின் வாழ்க்கையில் ஒருநாள்’.

‘மாட்ரியோனாவின் வீடு’, பேராசை பிடித்தவர்களுக்கு இடையே தனக்கென்று எதுவும் தேடிக்கொள்ளாத ஒரு கிழவியின் வாழ்க்கையைக் கூறுகிறது. (ரஷிய நாட்டுப்புறங்கள் புரட்சியால் மாறுபடாததை வர்ணனைகளின் மூலம் தெரிந்து கொள்ளலாம்).

மாட்ரியோனா பென்ஷனுக்காகப் பட்டபாட்டை ஸால் ஜெனிட்ஸின் கூறும் பகுதி இது:

They made her run around from office to office from two months on end, to get an i dotted or a t crossed. Every trip took a day. She goes down to the rural district council- and the secretary isn't there today. Secretaries of rural councils often aren't here today. So come in tomorrow. Tomorrow the Secretary is in, but he hasn't got his rubber stamp. So come again the next day. And the day after that back she goes yet again, because all her papers are pinned together and some cock-eyed clerk has signed the wrong ones.

மாட்ரியோனோவின் வீடு யாருக்கு? உறவினர்கள் இதைப்பற்றி எழுப்புகிற சண்டையில், ‘இதைக் கோர்ட்டில் தீர்த்துக் கொள்ளலாம்’ என்று ஒருவர் கூறியதும் திடுக்கிட்டு எல்லோரும் சேர்ந்து ‘நாமே தீர்த்துக் கொள்ளலாம்’ என்ற முடிவுக்கு வருகிறார்கள். ஏன் தெரியுமா? கோர்ட்டுக்குப் போனால் அங்கிருந்து மாவட்ட கௌன்ஸிலுக்குப் போய்விடுமாம் வீடு.

உன்னதமான கம்யூனிஸ சித்தாந்தத்தை மயக்கமும் திரிபும் இல்லாமல் தெளிவாகத் தெரிந்து கொண்ட ரஸனோவுக்குக் கழுத்திலே புற்று கண்டு, மாஸ்கோவுக்குச் சற்றுத் தொலைவிலுள்ள ஆஸ்பத்திரி ஒன்றில் சேர்க்கப்படுகிறார். மக்களால் மக்களுக்காக நடத்தப்படும் அப்பட்டமான மக்களாட்சியின் தீவிர விசுவாசியான ரஸனோவ் கான்ஸர் வார்டின் இதர மக்களை அனுசரிக்க முடியாமல் திணறுவதையும், சிறைப்பட்ட வன்மத்தோடு இயலாமையும், புற்று நோயும் சேர்ந்து ஆஸ்பத்திரிக்கு வந்து சேர்ந்த ஒலெக் காஸ்டாக்ளாடவையும் கான்ஸர் வார்டில் பார்க்கலாம். முன்னவர் கட்சிப் பொறிக்கு எண்ணெய் வார்த்தவர். பின்னவர் அந்தப் பொறியில் வதைக்கப் பட்டவர்.

இவான்டெனிஸோவிச்சில் ருஷிய தேசத்தையே ஒரு பெரிய கைதிக் களமாக ஸால் ஜெனிட்ஸின் உருவகத்திருப்பதாக மேற்கத்திய விமரிசகர்கள் கருதுகிறார்கள். கான்ஸர் வார்டு அப்படி இல்லை. ஆனால் கான்ஸர் வார்டை ஒரு அற்புதமான நாவலாக்கி யிருக்கிறார் ஸால்ஜெனிட்ஸின். நடவடிக்கைகளினால் விறு விறுப்பான வாழ்க்கையிலிருந்து திடீரென்று கத்தரிக்கப்பட்டு, ஆஸ்பத்திரியில் தன்னை முடக்கிவிட்ட அந்தக் கழுத்துப் புற்றுக் கட்டியைப் பார்த்து ‘எதிர்பாராத, பயனற்ற, வேண்டப்படாத இந்தக் கட்டி’ என்று ரஸனோவ் குமையும்பொழுது ஸால் ஜெனிட்ஸினின் எழுத்து சரியாகத் தைக்கிறது.

ஸால் ஜெனிட்ஸினை ருஷியாவின் மகத்தான எழுத்தாளர்களின் வரிசையில் சேர்த்துக் கூறுகிறார்கள் விமரிசகர்கள். இந்த ஆண்டின் இலக்கியத்துக்கான நோபல்பரிசை ஸால் ஜெனிட்ஸின் பெறுகிறார். ருஷிய அரசாங்கமும், அதற்கு ஊழியம் செய்யும் சோவியத் எழுத்தாளர் சங்கமும் இந்தப் பரிசளிப்பை எதிர்ப்பதோடு, அவருடைய திறமைகளை மேற்கத்திக்காரர்கள் அரசியல் காரணங்களுக்காக வேண்டுமென்றே மிகைப் படுத்துகிறார்கள் என்று குற்றம்சாட்டியுள்ளன. சென்ற வருடம் தான் வெளியேற்றிய ஒருவரை இந்த வருடம் உலகம் கௌரவிக்கிறது என்பதற்காக சோவியத் எழுத்தாளர் சங்கம் தன் நிலையிலிருந்து பின் வாங்க முடியுமோ!

ஸால் ஜெனிட்ஸினின் படைப்புகளில் இரண்டு ரஷிய நாட்டுக்கு வெளியேதான் அச்சாகியுள்ளன. இன்னும் சில படைப்புகள் அச்சேறாமல், தட்டெழுத்தும் பிரதியிலேயே ரகசியமாக இன்றும் ரஷியாவில் படிக்கப்படுவதாய் சொல்லப்படுகிறது. கடத்தி வரப் பட்ட அவருடைய கவிதைகள் சில மொழி பெயர்க்கப் பட்டு ஆங்கில ஏடுகளில் வெளிவந்துள்ளன. அண்மையில், ஸால் ஜெனிட்ஸினின் நண்பரும் விஞ்ஞானியுமான ஒருவருடைய வீட்டிலிருந்து அவருடைய அச்சேறாத நாவலொன்றையும் போலீஸார் பறிமுதல் செய்திருக்கிறார்கள்.

புஷ்கின், லெர்மாண்டாவ், டாஸ்டாவஸ்கி, ஆஸிப் மாண்டல்ஷ்டாம், சபாலாட்ஸ்கி போன்றவர்கள் ஜாரிஸத்தின் போதோ, அதற்குப்பிறகு சோஷியலிசத்தின் போதோ பட்ட நாடுகடத்தல் போன்ற அவஸ்தைகளையும், போரிஸ் பிலினிக், லியோனிட் லியானன், மிகாயில் வொஷ்செங்கோ, இல்யாஎரன்பர்க் போன்றவர்களுக்குக் கிடைத்த வாய்ப்பூட்டுகளையும் சின்யாவஸ்கி, டேனியல்களுக்குக் கிடைத்த விசாரணைகளையும் ருஷியாவில் எத்தனை எழுத்தாளர்கள் அனுபவிக்கிறார்களோ தெரியாது.

நோபல் பரிசைத் தானே நேரில் பெறுவதற்கு அலெக்ஸாண்டர் ஸால் ஜெனிட்ஸின் விருப்பம் தெரிவித்திருக்கிறார். ஆனால் சோவியத் அரசாங்கம் அவரை அனுமதிக்குமா என்று தெரியவில்லை. மேற்கத்திக்காரர்கள் அவரைப் பாராட்டிப் பரிசு தருகிறார்கள் என்ற காரணத்தை வைத்துக்கொண்டு வேறு ஏதேனும் கடுமையான நடவடிக்கைகளை அரசாங்கம் அவர் மீது எடுக்கக் கூடும். சிந்திக்கும் எழுத்தாளனுக்கு கிடைக்கும் மரியாதை அது. ●

# முட்டையினுள்...

குந்தர் கிராஸ்

நாம் முட்டையினுள் வசிக்கிறோம்.
ஓட்டின் உட்புறச் சுவரில்
ஒழுங்கற்ற சித்திரங்கள்,
நமது விரோதிகளின் முதற் பெயர்கள்
தீட்டி விட்டோம்.

நாம் அடைகாக்கப் பெறுகிறோம்.
நம்மை அடைகாக்கிற யாரோ
நமது பென்சில்களையும் அடைகாக்கிறார்கள்.
முட்டையிலிருந்து விடுபடும் ஒருநாள்
நம்மை அடைகாக்கிறவர்
படத்தை நாம் உடனே வரைவோம்.

நாம் அடைகாக்கப் பெறுகிறோம்
என்று நாம் எண்ணிக் கொள்கிறோம்.
நல்ல சுபாவமுள்ள கோழி
ஒன்றை கற்பித்துக் கொள்கிறோம்.
நம்மை அடைகாக்கும் கோழியின்
வர்ணம், வம்சம் பற்றி
பள்ளிக்கூட கட்டுரைகள் எழுதுகிறோம்.

நாம் ஓட்டை உடைப்பது எப்போது?
முட்டை உள்ளிருக்கும் மகான்கள்
அடைகாக்கும் நாள் குறித்து
அற்ப சம்பளத்திற்கு விவாதிக்கிறார்கள்.
நாம் விடுபடும் நாளை அவர்கள்
'க' எனக் குறிக்கிறார்கள்.

நிஜமான தேவை, சலிப்பின்
பொருட்டு நாம் அடைகாப்பவனை
கற்பிக்கிறோம்.

முட்டையுள் நமது சந்ததி
குறித்து நாம் கவலை கொள்கிறோம்.
நம்மை கவனிக்கும் அவளுக்கு
நமது முத்திரையை
மகிழ்வுடன் சிபாரிசு செய்வோம்.

ஆனால் நமது தலைக்குமேல் கூரை உண்டு.
மூப்படைந்த பட்சிகள்,
பன்மொழிக் குஞ்சுகள்
சள சளக்கின்றன;
தம் கனவுகளை விவாதிக்கின்றன.
நாம் அடைகாக்கப் படாவிட்டாலோ?
இந்த ஓடு என்றுமே உடையா விட்டாலோ?

நமது கிறுக்கல்களே நமது
தொடுவானம் என்றால், என்றும்
அதுவே என்றால்?
நாம் அடைகாக்கப் பெறுகிறோம்
என்று நாம் நம்புகிறோம்.
நாம் அடைகாப்பைப் பற்றிப் பேசினாலும்
இன்னொரு பயம் நமக்குண்டு.

ஓட்டின் வெளியே இருக்கும்
யாரோ ஒருவருக்குப் பசி ஏற்பட்டு
ஓட்டை உடைத்து உப்புச்சேர்த்து
வாணலியில் போட்டு
வதக்கக்கூடும்.
அப்பொழுது நாம் என்ன
செய்வோம், முட்டையினுள்
இருக்கும் எனது சகோதரர்களே!

(தற்கால ஜெர்மன் எழுத்தாளர்களில் குறிப்பிடத் தகுந்தவர் குந்தர் கிராஸ். 'Tin Drum,' 'Cat and Mouse' முதலிய நாவல்கள் எழுதியுள்ள இவர் நிறையகவிதைகளும், ஒரு நாடகமும் எழுதியுள்ளார். அரசியலில் தீவிரமாகப் பங்குபெறும் இவரின் முக்கியமான கவிதை இது. தமிழில் ஆர். சுவாமிநாதன்)

Published by N. Mahaganapathy 47, Nalla thambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.